ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

நாலாயிர திவ்யப்பிரபந்தங்களுக்குப்

பெரியவாச்சான்பிள்ளை வடக்குத்திருவீதிப்பிள்ளை

முதலான பூருவாசாரியர்கள் அருளிச்செய்த வியாக்கியானங்களிலிருந்து தொகுக்கப்பட்ட

ஐதிஹ்யங்களும் நிர்வாஹங்களுமடங்கிய மஹாநிதியான

# ஐதிஹ்ய நிர்வாஹ ரத்நமாலா.


ஆசிரியர்:

## ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்.


[ஸ்ரீராமாநுஜ பத்ரிகையின் வெளியீடு.]


காஞ்சீபுரம் ஸ்ரீவேங்கடேச்வர அச்சகத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

கிடைக்குமிடம்:

க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

P. B. ANNANGARACHARYA

Editor Granthamala, KANCHEEPURAM.

இதன் விலை 1 8 0

1953

ஸ்ரீ:
ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



# ஐதிஹ்ய நிர்வாஹ ரத்னமாலை

நான்காவதாயிரம்

## திருவாய்மொழி-பகவத்விஷயம்-ஈடு.

(மஹாப்ரவேசம்—முதல் ச்ரிய:பதியில்,)

1. "ஒரு குருவி பிணைத்த பிணை ஒருவராலவிழ்க்கப்போகிறதில்லை; ஸர்வசக்தி கருணாகுணமாகப் பிணைத்த பிணையை அவனையே கால்கட்டி அவிழ்த்துக்கொள்ளுமித்தனை காண்" என்று பிள்ளை திருநறையூரரையர் வார்த்தை.

2. "இவர்க்கு ப்ரியாப்ரியங்கள் ஒருகாலும் முடியாதே பர்யாயேண உண்டாயிருக்கையாலே இவர்க்கு சிந்தயந்திப்படி நித்யமாய்ச் செல்லுகையாலே இவரை நித்யசிந்தயந்தி என்னுமிற்று நம் முதலிகளருளிச் செய்வது."

3. "..........ஸகலவேத தாத்பர்யம் இவ்வர்த்தபஞ்சகமென்னுமிடத்தைப் பெரிய வங்கிப்புரத்துநம்பி திருவாய்மொழிக்கு வாக்யார்த்தமாக அருளிச் செய்தார்."

முதற்பத்து முதல் திருவாய்மொழி—பா—1. உயர்வற.

1. (அஹமஸ்யாவரோ ப்ராதா குணைர் தாஸ்யமுபாகத:) என்கிறவிடத்திலே, திருவடி இளையபெருமாளை "நீரிவர்க்கென்னாவீர்"! என்ன "பெருமாளுமொருபடி நினைத்திருப்பர், நானுமொருபடி நினைத்திருப்பேனென்றார்; அவர் "நினைத்திருக்கும்படியென், நீர் நினைத்திருக்கும்படியென்?" என்ன; "அவர் தம் பின்பிறந்தவனென்றிருப்பர், நான் அவர் குணங்களுக்குத் தோற்று அடியேனாயிருப்பன்" என்றாரே...

2. (உடையவன்) குணங்கள் தன்னை அஸ்தியென்று விடுமளவன்றிக்கே இவருறையிட்டு இருக்கவேண்டும்படியாயிருக்கும். அதாவது ஆச்ரயணத்துக்கன்றிக்கே ஸ்வரூபாநுபந்தியாயிருக்குமென்றபடி. ஆழ்வான் பிள்ளைப்பிள்ளையைப் பார்த்து "நிர்க்குணமென்பார் மிடற்றைப் பிடித்தாப்போலே ஆழ்வார் 'நலமுடையவன்' என்றபடி கண்டாயே" என்று பணித்தான். ........"ஸ்வாபாவிகாநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாண குணகண:" என்று இதுக்கு ஆளவந்தாருளிச்செய்யுஞ் சந்தை.

3. (மயர்வற இத்யாதி) ஜ்ஞாநாநுதயம், அந்யதாஜ்ஞாநம், விபரீதஜ்ஞாநம், என்கிறவிவை வாஸனையோடே போம்படியாக. "ஜ்ஞாநாநுதயமாவது, தேஹாத்மாபிமானம், அந்யதாஜ்ஞாநமாவது, தேவதாந்தர சேஷமென்றிருக்கை. விபரீதஜ்ஞாநமாவது ஸ்வதந்த்ரமாகவும் ஸ்வபோக்யமாகவும் நினைத்திருக்கிற கேவலனுடைய ஜ்ஞாநம், என்று நம்பிள்ளையருளிச்செய்வர்.

4. (மதிநலம்) "ஜ்ஞானபக்திகளிரண்டையும் தந்தான்" என்று நிர்வஹிப்பாருமுண்டு; அன்றிக்கே "நலமானமதியைத் தந்தான் என்றும் முளைக்கும்போதே வயிரம் பற்றி முளைக்கும் பதார்த்தம் போலே பக்திரூபாபந்நஜ்ஞானத்தைத் தந்தானென்கிறார்" என்று பட்டர் அருளிச்செய்யும்படி. கர்மஜ்ஞாநாநுக்ருஹீதையான பக்தி ஸ்தானத்திலே பகவத்ப்ரஸாதமாய் அனந்தரம் கைங்கர்யத்துக்குப் பூர்வ க்ஷணவர்த்தியான பக்தியாயிற்றிவரது. "ஆழ்வார் ப்ரபன்னரோ? பக்திநிஷ்டரோ?" என்று எம்பாரைச் சிலர் கேட்க, "ஆழ்வார் ப்ரபன்னர், பக்தி இவர்க்கு தேஹயாத்ராசேஷம்" என்றருளிச் செய்தார்; என்போல வென்னில்; காமுமெல்லாம் ப்ரபன்னராயிருக்கச்செய்தே ஆண்டாறுமாஸத்துக்கு ஜீவனம் தேடுகிறப்போலே; *உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணனிறே இவருக்கு.

5. (துயரறு) "துயரறுக்கும்" என்று முன்புள்ள முதலிகள் அருளிச்செய்யும்படி; ஸமஸ்தது:க்காபநோதந ஸ்வபாவமான திருவடிகள் ஸகலாத்மாக்களுடையவும் துக்கத்தைப் போக்குகையே ஸ்வபாவமான திருவடிகள். "துயரறும்சுடரடி" என்று எம்பெருமானாருளிச்செய்யும்படி. "வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருஸம் பவதி து:கித:" என்றால் துக்க நிவ்ருத்தியு மவனதாயிருக்குமிறே. இவர் துயரறத் தான் துயர் தீர்த்தானயிருக்கை. இத்தால் இவர் மயர்வற அவன் துயரற்றபடி.

(1-1-2 மனனகம்.)

6. (அதிர்கிழ்கழிவினுமினனிலன்) "இன வொப்பில்லையாகில் ஒருவகையாலே தான் ஒப்புண்டோவென்னில், அதுவுமில்லை என்கிறது" என்று நிர்வஹிப்பாருமுண்டு; அங்ஙனன்றிக்கே, பட்டர் "ஸாதர்ம்ய த்ருஷ்டாந்த மில்லையென்றது முன்பு, வைதர்ம்ய த்ருஷ்டாந்த மில்லை என்கிற திங்கு" என்று.

(1 1-6 நின்றனர்.)

7. ப்ரவ்ருத்தி அவனதீனயாகிறதுவேணுமாகில், நிவ்ருத்திக்கவன் வேணுமோ?" என்றெம்பாரைக் கேட்க; "ஸ்வர்க்கத்தில் நின்றும் விழுகிற த்ரிசங்குவை சக்திமான் நிற்கச்சொல்ல நிற்கவேண்டிற்றுக் கண்டாயே, அப்படியே நிவ்ருத்திக்குமவன் வேணுங்காண்" என்றருளிச்செய்தார்.

(1-2 வீடுமின்முற்றவும். ப்ரவேசம்.)

8. இத்திருவாய்மொழிதன்னை, ஆளவந்தார் அருளிச்செய்தாராகத் திருமாலையாண்டான் ப்ரபத்திவிஷயமாக்கி நிர்வஹித்துக்கொண்டுபோந்து, எம்பெருமானாரு மப்படியே அருளிச்செய்து கொண்டுபோந்து, பாஷ்யத்தலைக்கட்டினபின்பு பக்தி விஷயமாக வருளிச் செய்து கொண்டு போருவர், பின்பு எம்பாருமப்படியே யருளிச்செய்தார்.

9. "ஒருவனுக்கு வைஷ்ணவத்வமுண்டு, இல்லை என்னுமிடம் தனக்கே தெரியுங்காண்" என்று ஜீயர் பலகாலு மருளிச்செய்வர்; பிறர் அனர்த்தங்கண்டால் ஐயோ! என்றிருந்தானாகில் "நமக்கு பகவத் ஸம்பந்தமுண்டு" என்றிருக்கவடுக்கும்; இத்தனையும் பட்டிடுவானுக்கென்றிருந்தானாகில், "நமக்கு பகவத் ஸம்பந்த மில்லை என்றிருக்கவடுக்கும்" என்று

(1-2-7 அடங்கெழில்.)

10. ஒரு வ்யாபாரி, ஸ்த்ரீ கர்ப்பிணியான ஸமயத்திலே அர்த்தார்ஜனம் பண்ணவேணுமென்று போவது; அவளும் பிள்ளைபெற்று, அவனும் புக்வனும் தனக்கும் தமப்ப

ருடைய வ்யாபாரமே யாத்ரையாய், அவனும்போய் இருவரும் சரக்கு பிடித்துக் கொண்டுவந்து ஒரு பந்தலிலே தங்குவது; அது இருவருக்குமிடம் போராமையாலே அம்பலத்தேயேறவேண்டும்படி விவாதம் ப்ரஸ்துதமான ஸமயத்திலே, இருவரையு மறிவா னொருவன் வந்து "இவனுன் பிதா, நீயவன் புத்ரன்" என்றறிவித்தால், கிழிமுத்த ராவிக்கு சோகித்து, இருவர் சரக்கு மொன்றாய், அவன் ரக்ஷகனும் இவன் ரக்ஷ்யமாய் அன்வயித்து விடுமிறே.

11. ஒரு ராஜபுத்ரன் ஒரு உத்யானத்தைக்கண்டு புகவஞ்சினால் "உன்தமப்பனது காண்" என்னவே நினைத்தபடி புக்குப் பரிமாறலாமிறே.

(1-2-9 ஒடுங்கவவன்கண்.)

12. ஆயனத்தினின்று குன்றத்துச் சீயர், எம்பெருமானார் ஸ்ரீபாதத்திலே புக அவருடைய திருப்பெயரைச் சொல்லி "சிங்கப்பிரான்! இன்று அயலங்கிடாய்" என்ன, திருவுள்ளத்தில் ஓடுகிற தின்னதென் றறியாமையாலே அவர் பேசாதிருக்க "இத்தேஹ ஸம்பந்தத்திலே ப்ராப்தி கண்வழிவற்ற பின்பு நடுவு விரோதியாய்ச் செல்லுகிற காலிலே நாலன்று கழியப்பெற்றது உனக்கொன்றுமிருந்ததில்லையோ! என்றருளிச் செய்தார்.

13. எம்பார் ஒருநாளிலே "பின்னை யாக்கை விடும்பொழு தெண்ணே" என்று இந்நினைவே காரணமானது கழிந்தபோதே கார்யமும் தன்னடையே கழிந்ததேயன்றோ! ப்ராப்தியு மினிக் கைபுகுந்ததேயன்றோ! இனி சிந்தா விஷயமுண்டோ?" என்றருளிச் செய்தார்.

(1-2-10 எண்பெருக்கந்நலத்து.)

14. இப்பாட்டாலே திருமந்திரத்தை ஸார்த்தமாக வருளிச் செய்கிறார். ஆழ்வானிப்பாட்டளவும்வரப் பணித்து இப்பாட்டளவிலே வந்தவாறே "இத்தை நம்மாசார்யர்கள் பக்கலிலே கேட்டுக்கொள்ளுங்கோள்" என்ன, பட்டரும், சோமப்பிள்ளையு மெழுந்திருந்து போகப் புக்கவாறே அவர்களை அழைத்து "இன்னபோது இன்னாரிருப்பார், இன்னார் போவார் என்று தெரியாது; இருந்து கேளுங்கோள்" என்று திருமந்திரத்தை உபதேசித்து, இப்பாட்டை நிர்வஹித்து "இப்பாட்டை இதுக்கர்த்தமாக நினைத்திருங்கோள்" என்று பணித்தான்.

(1-3 பத்துடையடியவர் ப்ரவேசம்.)

15. "ஸர்வேச்வரனரியனென்றால் ஸம்ஸாரத்தில் ஆள்பற்றாதென்று அவனெளிமையை உபபாதித்துக்கொண்டு போந்தோம், அதுதானே அவர்களுக்கு "இத்தனை யெளியனோ" என்று விடுகைக் குடலாயிற்று; "அவ்வெளிமைதானே ஆதரிக்கைக்கு உடலாயிற்றது நமக்கொருவருக்குமேயிறே" என்று எம்பாரைப்பார்த்து உடையவர் அருளிச்செய்தருளினாராம்.

(1-3-1 பத்துடையடியவர்.)

16. (மத்துறு கடைவெண்ணெய்) "கடையா நிற்கச்செய்தே பசியரா யிருக்கு மவர்கள் சோறுசமையப்பற்றாமல் வெந்தது கொத்தையாக வாயிலிடுமாப்போலே, கடையப் பற்றாமல் நடுவே வள்ளி அமுதுசெய்யும்படியைச் சொல்லுகிறது" என்று பிள்ளான் பணிக்கும்படி.

(1-3-2. எளிவரும்)

17. (நிலவரம்பில) "இன்னவவதாரம் இன்ன சேஷ்டிதமென்றில்லை." என்று பூர்வாசார்யர்கள் நிர்வாஹம். பட்டர் இவ்விரண்டையும் நிலையில்லாமையிலே கொண்டு, "இனி வரம்பில்லாமையாவது—அவதரித்தெளியனாய்நின்ற நிலைதன்னிலே பரத்வந்தோற்ற நிற்கிலும் நிற்கும்" என்று.

(1-3-8 நாளுநின்றடும்.)

18. (நம் திருவுடை யடிகள் தம்) "ஸர்வேச்வரனை யாச்ரயித்தானாகில் அவன் பலப்ரதனாகிறான், பிராட்டியைப் புருஷகாரமாகப் பற்றவேண்டுகிறதென்" என்று நஞ்சீயர் பட்டரைக் கேட்க; "நாளுநம் திருவுடையடிகள் தம் நலங்கழல் வணங்கி" என்று, அவள் முன்னாக ஆச்ரயிக்கவேணு மென்னுகின்றது கண்டீரே" என்றருளிச்செய்து "அவனை யாச்ரயிக்குமிடத்தில் இவன் குற்றம் பாராதே தன்னிழலிலே இவனை வைத்து அவன் பக்கல் முகம் பெற்றவாறே குற்றத்தைப் பொறுப்பிக்கு மவள் முன்னாகப் பற்றவேணும்."

(1-3-10 துயக்கறு.)

19. (பெருநிலமித்யாதி) "மநோவாக்காயங்களாலே அநுபவிக்கப் பெற்றேனென்கிறார்" என்று பிள்ளான் பணிக்கும்படி. "இவற்றாலே அநுபவிக்கப் பார்க்கிறார்" என்று சீயரருளிச்செய்யும்படி.

(1-4 அஞ்சிறைய ப்ரவேசம்.)

20. முற்காலத்திலே அல்பம் விவக்ஷிதனா யிருப்பா னொருவன் "வீதராகா யிருப்பார் பரிக்ரஹித்துப் போருகிறதொன்றாயிருந்தது, தத்வபரமாக வடுக்கும்" என்று இத்திருவாய்மொழியளவும்வர அதிகரித்து, இத்திருவாய் மொழியளவிலே வந்தவாறே "இது காமுகவாக்யமாயிருந்தது!" என்று கைவிட்டுப் போனான்; "நிதித்யாஸிதவ்ய:" என்று விதிக்கிற பகவத்காமமென்றறிந்திலன் பாக்யஹாநியாலே."

(1-4-2 என்செய்யதாமரைக்கண்.)

21. திருக்கோட்டியூரிலே தெற்காழ்வான் கோளரியாழ்வானுக்கு தீர்த்தத் துறையிலே சொன்னவார்த்தை- "ஒரு முழுக்காலும் இரண்டு முழுக்காலும் போகாது காண் - தெற்காழ்வார் கையிற் திருவாழியாலே வினையை யறுத்துக்கொண்டு போகிலத்தனையொழிய, ஒன்றிரண்டு முழுக்கால் போகாதுகாண் நான் பண்ணின பாபம்."

22. (இனம்) என்றவித்தை இன்னம் என்றுக்கி-"மங்களபிமதப் பெடைகளோடேகூடுங்கள் பக்கலொரு கண்மையில்லாத பின்பும் தாழ்க்குமித்தனையோ! என்கிறாள்" என்று பிள்ளை திருநறையூரரையர் பணிக்கும்படி.

(1-4-3 விதியினால் பெடைமணக்கும்.)

23. (கள்வர்க்கு) "வஞ்சகர்க்கு" என்று திருமாலையாண்டான் நிர்வஹிக்கும்படி. எம்பெருமானார், "ஒன்றைநினைத் தொன்றைச் செய்தவற்கு" என்றருளிச் செய்வர்.

(1-4-4-என்னீர்மை கண்டிரங்கி.)

24 பட்டரை யொருதமிழன் "கேட்டிரங்கி யென்னாதே கண்டிரங்கி என்னப் பெறுமோ" என்ன; "அணைந்தகை நெகிழ்ந்தவளவிலே வெளுத்தபடி கண்டால் பிரியத் தகாதென்றிருக்கவேண்டாவோ; "இப்படி கூடுமோ" என்னில் "புச்சியித்யாதி, *காதலர் தொடுவுழியித்யாதி. உலக்கித்தமிழ் போகாதே" என்றார்.

(1-4-5-நல்கித்தான்.)

25. (அருளாயே) திர்யக்கை "அருளாய்" என்கிறதேதென்ன "நம்பியேறு திருவுடையான் தாஸர் திருநாட்டுக்கு நடந்தார்" என்று பட்டருக்கு விண்ணப்பஞ்செய்ய, அதுக்கென் றெழுந்திருந்து "அவர் ஸ்ரீவைஷ்ணவர்களுடன் பரிமாறும்படிக்கு, திருநாட்டுக் கெழுந்தருளினரென்ன வேணுங்காண்" என்றருளிச்செய்தார்.

(1-4-7 என்பிழைகோப்பதுபோல.)

26. (அருளாததிருமாலார்க்கு) "ந கச்சிந்நாபராத்யதி யென்பாரும் அருகேயிருக்க எங்கள் குற்றம்பார்த்து அவள் பக்கல் முகம்பெற விருக்கிறுரே!" என்று நஞ்ஜீய ரருளிச் செய்யும்படி. ஈனிப்படி சோர்வுபட வேண்டுகிறது-அவனுக்கவள் முகங்கொடுத்து அங்கே இவக்குகையிறே யென்று இன்னாதாகிறுன்" என்று பிள்ளான் பணிக்கும்படி.

27. (திருவடியின்தகவினுக்கு என்பிழைத்தாள்) தேவரீர் க்ருபைக்குத் தண்ணீர்த் துரும்பாக ஏதேனும் ப்ரதக்ஷிண நமஸ்காராதிகள் பண்ணிற்றுண்டோ" என்று நம்பிள்ளை யருளிச்செய்யும்படி.

(1-4-8-நீயலையே சிறுபூவாய்.)

28. (வாயலகிலின்னடிசில்வைப்பாரை நாடாய்) பெரிய திருமலைநம்பி தம்முடைய அந்திமதசையிலே தமக்கொரு வெண்ணெய்க்காடும் பிள்ளையாயிற்று திருவாராதனம், அவர் திருமுன்பில் திருத்திரையை வாங்கச்சொல்லி "சாயலொடு மணிமாமை தளர்ந்தேன் நானினி யுனது வாயலகி லின்னடிசில் வைப்பாரை நாடாயே" என்றாராம்.

(1-4-9 நாடாதமலர்நாடி.)

29. (நாடாதமலர்நாடி) "ஆத்மபுஷ்பத்தைச் சொல்லுகிறது" என்பாருமுண்டு. அங்ஙனன்றிக்கே, ஜீயர் "எண்டிசையுமுள்ளபூக்கொண்டு" என்கிறபடியே, தேடவரிய புஷ்பங்களெல்லாம் தேடி" என்றருளிச்செய்வர்.

(1-5-2 நினைந்துநைந்து.)

30. (விளைந்தவெல்லாப்பொருள்களுக்கும் வித்தாய்) "விளைந்த ஸகலங்களும், கூடவுமாய், ஸ்ந்வந்தமாய்த் தன்னுடனே கூடிக்கிடக்கிற ஸகல பதார்த்தங்களுக்குங் காரணமாய்" என்று பிள்ளையமுதனார் நிர்வஹிப்பர். அன்றியே இப்படி தன் திருவுள்ளத்தாலே விஷயீகரிக்கப்பட்ட ஸகல பதார்த்தங்களுக்கும் காரணமாய்.

(1-5-5-மானேநோக்கி)

(அரும்பதவுரையில்.)

31. (பேரம்பழியெல்லாம்அமணன் தலையோடே) என்னுமாப்போலே பெருமாள் செய்ததையுமவன் தலையி லேறிட்டுச் சொல்லுதலென்றபடி. (அமணன் தலையோடே) அதாவது, ஒருகள்ளன் ஒரு ப்ராம்மண க்ருஹத்திலே கன்னமிட, அது ஈரச்சுவ ராகையாலே, இடிந்துகொண்டு அவன்மரிக்க, அவ்வளவில், அவன் பந்துக்கள் வந்து ப்ராஹ்மணனை "பழிதரவேணும்" என்ன இரண்டு திறத்தாரும், ராஜாவின் பாடேபோக அந்த ராஜாவும், அவிவேகியாய் மூர்க்கனுமாகையாலே "ப்ராஹ்மணா! நீ ஈரச்சுவரை வைக்கையாலே யன்றோ அவன் மரித்தான், ஆகையாலே நீ பழிகொடுக்கவேணும்" என்ன, அவன் "எனக்குத் தெரியாது, சுவர்வைத்த கூலியாளைக் கேட்கவேணும்" என்ன, அவனை அழைத்து "நீயன்றோ ஈரச்சுவர் வைத்தாய், நீ பழிகொடுக்கவேணும்" என்ன, அவனும் "தண்ணீர் விடுகிறவன் சோரவிட்டான், என்னும் செய்யலாவதென்" என்ன, அவனை

அழைத்துக் கேட்க, அவனும் "குசவன் பெரும்பானையைத் தந்தான், அதினாலே நீரேற்றது" என்ன, அவனை அழைத்துக் கேட்க, அவனும் "என்னால் வந்ததன்று, ஒரு வேசியை போகவாய் இருந்தாள், அவளைப்பார்க்கிற பராக்கிலே பானை பருத்தது" என்ன, அவளை அழைத்துக்கேட்க, அவளும் "என்னாலன்று, வண்ணான் புடவை தாராமையாலே போகவாய் இருந்தேன்" என்ன, அவனை அழைத்துக்கேட்க, அவனும் "என்னாலன்று, துறையில் கல்லிலே ஓர் அமணன் வந்திருந்தான்; அவன் போகவிட்டுத் துணி தோய்க்க வேண்டிற்று" என்ன, அந்த அமணனைத்தேடிப்பிடித்துக்கொண்டுவந்து "நீயன்றோ இத்தனையுஞ் செய்தாய், நீ பழிகொடுக்கவேணும்" என்ன அவன் மௌனியாகையாலே பேசாதிருக்க "உண்மைக்கு உத்தரமில்லை யென்றிருக்கிறான், இவனே யெல்லாஞ் செய்தான்" என்று ராஜா அவன் தலையரிந்தான். இக்கதையை அநுஸந்திப்பது.)

(1-5-11 மாலேமாயப்பெருமானே)

32. (பாலேய்தமிழர்) பாலைப்போலே இனிய தமிழையுடையவர்கள். (இசைகாரர்) இயலுக்கிசைய இசையிடவல்லவர்கள். ஸ்ரீமதுரகவிகளையும் நாதமுனிகளையும்போலே யிருக்குமவர்கள். (பத்தர்) பகவத்குணானுபவத்தி லிவர் தம்மைப்போலே "காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" என்றிருக்குமவர்கள். ஆழ்வானொருவிலே; ஸ்ரீபராங்குசப்பிள்ளை—பாலேய்தமிழ ரென்கிறது இசைகாரரென்கிறது—ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையரை, பத்தரென்கிறது—பிள்ளையுறங்காவில்லிதாஸரை" என்று பணித்தானும். "பாலேய்தமிழரென்கிறது—முதலாழ்வார்களை, இசைகாரரென்கிறது—திருப்பாணாழ்வாரை. பத்தரென்கிறது பெரியாழ்வாரை" என்று ஆளவந்தாரருளிச்செய்வர்.

(1-6-1 பரிவதில்)

33. (புனைபூவே) "செறுகையிட்டுப் புனைக்கவமையும், கண்டகாலியிடவுமமையும்" என்று பட்டருளிச்செய்யும்படி. இத்தை பட்டருளிச்செய்தவாறே "கண்டகாரிகா புஷ்பம் தேவாய நிவேதயேத்' என்னாநின்றதே" என்று நஞ்ஜீயர்கேட்க, "அவனுக்காகாது' என்கிறதல்ல 'பறிக்கிற ஆச்ரிதன்கையிலே முட்பாயும் என்றதுக்காகத் தவிர்த்ததுகாணும்" என்றருளிச்செய்தார். "அப்ராக்ருத த்ரவ்யம்வேணும்" என்றிருந்தானாகில் ஸ்ரீவைகுண்டத்திலிராதே "ஸ்ரீவராஹநாயனாருக்கு முத்தங்காசை யமுதுசெய்விப்பது" என்று கிடந்ததாய், "இதென்னமெய்ப்பாடுதான்!" என்று நஞ்ஜீயர் போர வித்தாராயருளினார்.

1-6-6 அமுதமமரர்.)

34. (அமுதிலுமாற்றவினியன்) நம்பி திருவழுதி நாடுதாஸர், "இத்தேவஜாதி வெறும் மனையோ, 'உப்புச்சாறு இனநுவதெப்போதோ' என்று கவிழ்ந்து பார்த்துக் கிடப்பதே! இவனழகையும் போக்யதையையும் விட்டு" என்பாராம்.

(1-7 3 ஆயர்கொழுந்தாய்)

35. (அவரால் புடையுண்ணும்) "மத்தாலேயோடியடிப்பர்போலேகாணும்" என்று பட்டருளிச்செய்யும்படி.

(1-7-4-மயர்வற )

(அரும்பதவுரையில்.)

36. (என் சொல்லி யான் விடுவேனோ) என்கிற விடத்தில் ஐதிஹ்யம்—அதாவது, ஒரு ப்ராஹ்மணப்பிள்ளை மாமனார் க்ருஹத்துக்குப் போக அவன் சிக்கினானையாலே இவனையுங் கூட்டிக்கொண்டுபோய், கெடும்போது எற்ற மிலைக்க, மாப்பிள்ளைக்குக்

கரமேலாய்ந்தவளவில், "விட்டுப்போகைக்கு ஹேதுவாக மாயனுருகவ்யாருகவேஷத்தை யுண்டாக்குவோம்" என்று, இறைக்கிற மாயனூர் பேலே உச்சிஷ்டத்தை உமிழ; அவளும் "ஒரு குளிர்த்தியிருந்தபடியென்!" என்ன; "சடச்சடவுமிழ்வாரைத் தேடிக்கொள்" என்று இறங்கிப்போனானும்.

(1-7-7 யானொட்டி யென்னுள்.)

37. (பின்னையானொட்டுவேனோ) "ஏப்ரகாரத்தாலுமிரேன்" என்னுமாகில், பின்னை, நானவன்போக்கை யிசைவேனோ. என்னுடைய கர்மபாரதந்த்ரியம்போலே அவனுடைய ஆச்ரிதபாரதந்த்ரியத்துக்கு மேதேனும் கண்ணழிவுண்டோ; என்னிசையின்றிக்கேயிருக்க, அவனாலே போகப்போமோ. அன்றியே, "நான் தொங்குவேனோ" என்று பிள்ளான் பணிக்கும்படி.

(1-8 ஓடும்புள் ப்ரவேசம்.)

38. (இத் திருவாய்மொழிதான்) "ஸர்வேச்வரனுடைய ஐச்வர்யத்தைச் சொல்லுகிறது" என்பாருமுண்டு; அன்றிக்கே, "ஈச்வரத்வலக்ஷணஞ் சொல்லுகிறது" என்பாருமுண்டு; அன்றிக்கே, 'கீழே 'பாடியிளைப்பிலம்' என்றார், அப்படியே பாடியநுபவிக்கிறார்" என்பாருமுண்டு. "ஆர்ஜவகுணம் சொல்லுகிறது" என்று பட்டருளிச்செய்யும்படி.

(1-9-6-மாயனென்னெஞ்சினுள்ளான்.)

(அரும்பதவுரையில்.)

39. (துயக்கன் மயக்கன்) பட்டர் திருவோலக்கத்துக்குப் பலகாலும் சாஸ்திரியாயிருப்பானொரு ப்ராஹ்மணன் சென்றுமிருப்பானாம்; அவனைக்கண்டால் பட்டரும் "வந்தாயோ போனாயோ" என்று ஸாமான்யேந வ்யவஹரித்தருளிச்செய்வர்; ஒரு ஸ்ரீவைஷ்ணவர் பலகாலும் ஸேவிக்க எழுந்தருளுவர், அவரைக்கண்டால் மிகவும் க்ருபை பண்ணி ஆதரித்துக்கொண்டெழுந்தருளியிருப்பர்; இத்தைப் பலகாலுங் கண்டிருப்பாரொருவர் பட்டரை வந்து ஸேவித்து, "ஸ்வாமிந்! தேவரீர் திருவோலக்கத்துக்கு வருகிற ஸாஸ்த்ரி ப்ரஸித்தனாயிருக்கிறவன், அவன் வந்தால் ஸாமான்யமாக வ்யவஹரித்தருளுகிறது; ஒருவராது ஸ்ரீவைஷ்ணவர் வந்தாரென்றால், அவரை மிகவும் ப்ரதிபத்தி பண்ணியருளுகிறது; இரண்டையும் எனக்கு அருளிச் செய்யவேணும்" என்ன, "ஆனால் அவர்களிரண்டுபேரும் எப்போதும்போலே நாளையும் வருவர்கள், அப்போது நீயேயப்போதும் போலே பார்த்திரு, இரண்டுஞ்சொல்லுகிறோம்" என்ன, அப்படியே பார்த்திருக்க, மற்றைநாள் விடிவோறே அந்த ப்ராஹ்மணன் ப்ரதமம் வந்து ஸேவிக்க, அவனை யெப்போதும்போலே வினவியருளி, "நீர் ஆரைத்தான் பரதத்வமென்று நினைத்திருக்கிறது" என்ன, "சிலது ப்ரமாணங்கள் ப்ரஹ்மாவை பரதத்வமென்று சொல்லுகிறது, சிலது ப்ரமாணங்கள் விஷ்ணுவை பரதத்வமென்று சொல்லுகிறது; ஆகையினாலே நம்மாலே நிச்சயிக்கப்போமோ" என்ன, "நல்லது" என்றிருந்து, அவன் போனவாறே ஸ்ரீவைஷ்ணவரெழுந்தருளி ஸேவிக்க, அவரையும் க்ருபை செய்தருளி, "தேவரீர் ஆரைத்தான் பரதத்வமென்றிருப்பீர்" என்ன, "தேவரீர், ச்ரிய:பதி நாராயணனே பரதத்வம் என்றருளிச்செய்யுமே, அதொழிய அடியேன் வேறொன்றறியேன்" என்ன, "இன்னமும் உமக்குத் தஞ்சமாக நினைத்திருப்பதேது" என்ன, "எம்பெருமானார் திருவடிகளே உபாயோபேயம்" என்று ப்ரஸாதித்தருளுமே, அத்தையே தஞ்சமாக நினைத்திருப்பன்" என்ன; திருவுள்ள முகந்து, "அபசாரத்தை க்ஷமித்தருள, திருமாளிகைக்கெழுந்தருள" என்றருளிச்செய்து, பார்த்திருந்தவரைப் பார்த்து, "கண்டதோ இருவர்க்கு முண்டான

தாரதம்யம், ஆகையாலே, இவரை வணங்கவோ, அவனை வணங்கவோ? இப்படியன்றோ ஸ்வரூப ஸ்திதி யிருந்தது" என்றருளிச்செய்ய, அவரும் க்ருதார்த்தராய்ப் போனாரென்று.

(1-9-7 தோளிணை மேலும்.)

40. (தோளிணையித்யாதி) பட்டர், "வீராயிருப்பார் முற்பட ஆயுதத்துக்கிடுவர்கள், அப்படியே திருத்தோள்களுக் கிட்டான். ப்ரணயிகளாயிருப்பார் அனந்தர மபிமத விஷயத்துக்கிடுவர்கள். அப்படியே பெரியபிராட்டியார் எழுந்தருளியிருக்கிற கோயில் கட்டணத்துக்கும் கொடுத்தான்; ஆயுதத்துக்கு மபிமதவிஷயத்துக்குமிட்டால், பின்னைத் தாம்தாம் விநியோகங்கொள்ளுமித்தனையிறே; ஆகையாலே தான் சூடினான்; சேஷம் பின்னையடியாரிறே கைக்கொள்ளுவார், ஆகையாலே திருவடிகளுக்குச் சாத்தினான்; ஆபத்துக்குதவுவா ரடியாரிறே, தளர்ந்தும் முறிந்தும் சகட வசுரருடல் வேறாப்பிளந்து வீயப் பொருவா ரடியாரிறே; நம்முடைய வாபத்துக்களுக்குத் திருவடிகளே துணையானாப் போலே காணுமவனுடைய ஆபத்துக்களுக்கும் திருவடிகளே துணையானபடி" என்றருளிச்செய்வர்.

(1-10 பொருமாநீள். ப்ரவேசம்)

41. "கீழிற்றிருவாய்மொழியில் பிறந்த ஸர்வாங்க ஸம்ச்லேஷத்தை அநுஸந்தித்து நிர்வ்ருதராகிறார்." என்று முன்புள்ள முதலிகள் நிர்வஹிக்கும்படி. கீழிற்பிறந்த ஸர்வாங்க ஸம்ச்லேஷத்தை யநுஸந்தித்து பட்டருளிச் செய்வதோ ரேற்றமுண்டு. அதாவது......" கீழில் திருவாய்மொழியில் உன்மஸ்தகமாகப் பிறந்த ஸம்ச்லேஷணத்தை அநுஸந்தித்து ..........நிர்வ்ருதராகிறார் என்று. [மிக விரிவான ஸ்ரீஸூக்திகளை சுட்டிலே ஸேவிப்பது.]

(1-10-2-கண்ணுள்ளே நிற்கும்)

42. (என்னினிவேண்டுவம்) வேல்வெட்டி நம்பியார், நம்பிள்ளையை, "பெருமாள் கடலை சரணம் புகுகிறவிடத்தில், ப்ராங்முகத்வாதி நியமங்களோடே சரணம் புக்காராயிருந்தது, இவ்வுபாயம் இதர ஸாதனங்கள்போலே, சில நியமங்களை வேண்டியிருக்கிறதோ" என்று கேட்க, "பெருமாள் தமக்கு, 'ஸமுத்ரம் ராகவோ ராஜா சரணங் கந்துமர்ஹதி' என்றுபதேசித்தான் ஸ்ரீ விபீஷணாழ்வான்; அவன்றான் பெருமாளை சரணம் புகுகிறவிடத்தில், கடலிலே ஒரு முழுக்கிட்டு வந்தான்' என்றில்லை; ஆக இத்தால் சொல்லிற்றாயிற்றென்னென்னில்; பெருமாள் இக்ஷ்வாகுவம்ஸ்யராய் ஆசாரப்ரதானராகையாலே சில நியமங்களோடே சரணம்புக்கார், ராக்ஷஸஜாதியனாகையாலே, அவன் நின்ற நிலையிலே, சரணம் புக்கான், ஆகையாலே யோக்யனுக்கு அயோக்யதை ஸம்பாதிக்கவேண்டா; அயோக்யனுக்கு யோக்யதை ஸம்பாதிக்க வேண்டா; ஆனபின்பு ஸர்வாதிகார மிவ்வுபாயம்." என்றருளிச்செய்தார். .... .... .... .... *

# இரண்டாம் பத்து

(2-1. வாயுந்திரை 7 தோற்றோம்.)

43. (தோற்றோமித்யாதி) கீழும் மேலும் போருகிறபடி யொழிய சப்தஸ்வாரஸ்யத்தைப்பற்ற எம்பெருமானா ரருளிச்செய்த பொருளொன்றுண்டு; அம்மங்கியம்மாளு மத்தையே நிர்ப்பந்தித்துப்போரும். அதாகிறதுதான், பிரிவாற்றாதா ரனேகர் கூடக் கட்டிக்

கொண்டு கடப்பட்டிருக்க, இருள்வந்து முகத்தை மறைக்க, அத்தைப்பார்த்து, ஆற்றுமைக்குப் போக்குவிட்டு தரிக்கவொட்டாதே நீ வந்து கலியக்கடவையோ வென்கிறுள்.

(2-2 திண்ணன்வீடு—ப்ரவேசம்.)

44. "(மூவாமுதல்வா) என்று காரணத்வம் ப்ரஸ்துதமாகையாலே அந்த காரணத்வத்தை உபபாதிக்கிறுர்" என்று பணிக்கும் பிள்ளான்.

(2-2-3-ஏறனைப்பூவனை.)

45. "ப்ரஹ்மாதிகள் எப்போதும் திருமேனியைப்பற்றி யிருப்பர்களோ" என்று நஞ்சீயர் பட்டரைக்கேட்க; "ஒரோராபத்துக்களிலே திருமேனியிலே யிடங்கொடுக்கிறுன், அந்நீர்மையை விடமாட்டாமையாலே ஆழ்வார்க ளத்தையே வாய்புலற்றுகிறுர்க ளத்தனை யிறே" என்று அருளிச்செய்தார்.

(2-3-1. ஊனில்வாழுயிரே.)

46. (தேனும்பாலு மித்யாதி) இதுக்காளவந்தார் அருளிச்செய்தாராகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி-"ஏகஜாதீய த்ரவ்யங்கள் தன்னிலே கலந்தாப்போலே" என்று. அதாவது-தேனும்தேனும் கலந்தாப்போலவும், பாலும்பாலும் கலந்தாப்போலவும், நெய்யும் நெய்யும் கலந்தாப்போலவும், கன்னலும்கன்னலும் கலந்தாப்போலவும், அமுதும் அமுதும் கலந்தாப்போலவும் என்று. அங்ஙனன்றியே, எம்பெருமானார் அருளிச்செய்யும்படி—இவற்றை ரஸவத்பதார்த்தங்களுக்கெல்லா முபலக்ஷணமாக்கி-"தானும் நானுமான கலவிக்குள்ளே யெல்லா ரஸங்களும் பிறக்கும்படி ஸம்ச்லேஷித்தோமென்கிறுர்" என்று.

(2-3-2-ஒத்தார் மிக்காரை)

47. இப்பாட்டு ப்ரஸ்துதமான வளவிலே எம்பார் கோஷ்டியிலே "இவ்வாத்மாவுக்கு ப்ரதமகுருவார்" என்று பிறந்ததாய், இருந்த முதலிகளிற் சிலர் "ஆசார்யனன்றே" என்றுர்கள்; சிலர் "ஆசார்யன் ஸ்ரீபாதத்திலே ஆச்ரயிக்கப்போரு என்று அழைத்துக் கொண்டு போய்ச் சேர்விட்ட ஸ்ரீவைஷ்ணவன் 'ப்ரதமகுரு'" என்றுர்கள்; "அங்ஙனன்றுகாண், அவனிவனையழைத்தாலும் இவன் அல்லேன் என்னுதபடி 'இசைவித்தென்னை' என்கிறபடியே அகவாயிலே யிருந்திசைவித்த ஸர்வேச்வரன்காண் ப்ரதமகுரு" என்றருளிச்செய்தார்.

(2-3-3 அறியாக்காலத்துள்ளே.)

48. ஆளவந்தார் அருளிச்செய்ததாகத் திருமாலையாண்டான்பணிக்கும்படி-"அறிவுடையனாகாத வயசிலே ஸம்யக்ஜ்ஞானத்தைப் பிறப்பித்து, பிறந்த ஜ்ஞானத்தை அழிக்கக்கடவதான தேஹஸம்பந்தத்தோடே பின்னையும் வைத்தாய்' என்கிற இழவாலே சொல்லுகிறுர்" என்றும். இத்தை எம்பெருமானார் கேட்டருளி, முன்னிற்பாட்டுக்களும் பின்னிற்பாட்டுக்களும் ப்ரீதியோடேநடவாநிற்க, நடுவே அப்ரீதி தோற்றச்சொல்லுமது சேராது, ஆனபின்பு இங்ஙனேயாமித்தனை—'அறியா மாமாயத்தடியேனை - அறியாக்காலத்துள்ளே அடிமைக்கணன்பு செய்வித்து வைத்தாயால்' என்கிறுர்". என்றித்தையு மொரு உபகாரமாக்கி அருளிச்செய்தார்.

(2-3-6 சேர்ந்தார் தீவினைகட்கு.)

49. (நன்மதியை) முன்பே சேர்ந்திருக்குமவர்களுக்குத் தின்னியதான மதியைக் கொடுக்குமவனை. அம்பரீஷன் தபஸ்ஸு பண்ணாநிற்க, ஸர்வேச்வரன் இந்த்ரவேஷத்தை

தரித்துக்கொண்டு சென்று, "உனக்கு வேண்டியவற்றை வேண்டிக்கொள்" என்ன, "நான் உன்னையாராதிக்குமவனல்லேன்காண், என்னை ஸமாதிபங்கம் பண்ணாதே போகவல்லையே, உன்னைக் கும்பிடுகிறேன்" என்றானிறே. (4-10-7ல் ஐதிஹ்யம் பார்ப்பது.)

(2-4-1, ஆடியாடி)

50. (மல்கி) மிக்கு. [கிமர்த்தம் தவ நேத்ராப்யாம் வாரி ஸ்ரவதி ஶோகஜம்] "ஆனந்தாச்ருவுக்கு யோக்யமான கண்களாலே ஶோகாச்ரு ப்ரவஹிக்கிறது ஆர்குடிவேரற" என்று பட்டரருளிச் செய்யும்படி; அன்றிக்கே, பிள்ளான், "ஆரைச் சேதநராகக்கொண்டு" என்று பணிக்கும்.

51. (எங்கும் நாடிநாடி) "தன்கோயிற்சகமுட்படப் பாராநின்றாள்" என்று பட்டர[illegible]ளிச் செய்யும்படி; அதுக்குக் கருத்து "கண்ணனென்னெக்கலையானே" என்று தலைவிருந்த ப்ரதேசமாகையாலே.

(2-4-3 இரக்கமனத்தோடு.)

52. (அரக்குமெழுகும்) என்கிற இரண்டையும் [illegible] நிர்வஹிப்பர், பின்னை திருநறையூரரையர். [illegible] பாலையாலே இவள்தனக்கே இரண்டையுமாக்கி யருளிச்செய்[illegible] என்கிறபடியே எல்லாமிவள் தன்படிக்கு [illegible] யிறே இவள் தன்னிலே; அக்னிக்குள்ளே புகில் கரிந்துபோம், கடக்கவிருக்கில் [illegible] அக்னிஸகாஶத்திலே யுருகாநிற்குமிறே; முடிந்து பிழைக்கவும் பெறாதே தரித்திருக்கவும் பெறாதே நோவுபடும்படி பண்ணுவிரே!

(2-4-5 இவளிராப்பகல்.)

53. (தலைவண்ணர் தகவுகளே) "ஸத்வஸ்வபாவரானவர்முடைய தகவுகளெங்கே போயிற்றன" என்றெம்பாரருளிச்செய்யும்படி. அன்றிக்கே, பட்டர், "உம்மைப்போலே காருணிகர்களையுமிறே அபலைகள் குடிகெட" என்றார்.

(2-5-1 அந்தாமத்தன்பு.)

54. (அந்தாமமித்யாதி) "அடியார்கள் குழாங்களையுடன் கூடுவதென்றுகொலோ" என்றிவராசைப்பட்டபடியே, நித்யஸூரிகளோடேவந்து கலந்தான்" என்று ஆளவந்தாரருளிச்செய்தாராகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி. ஆனால் அவர்களை "ஆழி நாலாரம்" என்றே சொல்லுவதென்னில்; சின்மயராயிருக்கச்செய்தே பாரதந்த்ரிய ஸித்திக்காகத் தங்களை அமைத்துவைக்கிற ஸித்தனையிறே. அங்ஙனன்றிக்கே, எம்பெருமானார் அருளிச்செய்யும்படி "இவரோடு ஸம்ச்லேஷிப்பதற்குமுன்பு அவனோடொக்க இவையும் அநுஜ்ஜ்வலமாய் அஸத்ஸமமாய் இவரோடு கலந்தபின்பு உஜ்ஜ்வலமாய் ஸத்தைபெற்றபடி சொல்லுகிறது" என்று; கல்பகத்தரு வாடினால் அதில் பூவும் தளிரும் வாடுமிறே.

(2-5-2 திருவுடம்பு வான்சுடர்)

55. (திருவுடம்புவான்சுடர்.) "ஈச்வரனுக்கு விக்ரஹமில்லை, விபூதியில்லை' என்கிறவர்கள் முன்பே, ஆப்ததமரான இவர் 'திருவுடம்புவான்சுடர்' என்னப்பெறுவதே! ஈச்வரனுக்கு விக்ரஹமில்லை, குணமில்லை' என்கிறவர்கள் பண்ணிவைக்கமாட்டாத பாவமில்லை; அவர்களை அநுவர்த்தித்து அதுகேட்கவிராதபடி பெருமாள் நமக்குப் பண்ணின உபகாரமென்" என்றருளிச்செய்வர் ஜீயர்.

என்றான், "இது விச்வாமித்ரஸ்ருஷ்டி, ஆளவந்தார் அருளிச்செய்யக் கேட்டறியேன்" என்று பணிக்குமாம் ஆண்டான்; ஆண்டான் "இப்பாட்டுக்கு விச்வாமித்ர ஸ்ருஷ்டி வேண்டாவாயிருந்தது" என்ன, இப்பாட்டால்—தன் அவயவ சௌந்தர்யத்தாலே என்னைத் தனக்காக்கினான் என்கிறார்" என்றருளிச்செய்தருளினாராம். அதவுக்கிடக்க, பட்டருளிச் செய்வதொன்றுண்டு "ஆழ்வாரையு மாழ்வார் பரிகரத்தையும் விஷயீகரித்து, அத்தாலே திருமேனியிற்பிறந்த ஔஜ்வல்யத்தைச் சொல்லுகிறது" என்று.

(2-7-9 சீரிதரன்)

62. (இராப்பகலித்யாதி) இவர் "பக்திபரவசராகையாலே இவருடைய தேஹயாத்ரையிருக்கும்படி" என்று முன்புள்ள முதலிகள் நிர்வஹிக்கும்படி. அன்றிக்கே, பட்டர் "பரி இயதீனி மாவவென்கிறவிடத்தளவும்—*ஆடியாடியிலவர்க்கோடின தசையாய், இன்பவளவென்கிற விது*—அக்ராமத்தன்புதொடங்கிக் கேசவன்தமரளவும் வாவண்டாவையைச் சொல்லுகிறது" என்று.

(2-8 அணைவதரவணை. ப்ரவேசம்)

63. இத்திருவாய்மொழிதன்னை—"ஐச்வர்யத்தைச் சொல்லுகிறது" என்று நிர்வஹிப்பாருமுண்டு; "மோக்ஷத்தைச் சொல்லுகிறது" என்று பட்டர் அருளிச்செய்வர். [illegible] முன்னை [illegible] ஒன்றுமிட்டிராது, ஐச்வர்யமாயிற்று [illegible]; [illegible] ஐச்வர்யமாகவேணும்.

(2-9 எம்மாவீடு. ப்ரவேசம்)

64. எம்பார் இத்திருவாய்மொழி யருளிச்செய்யப் புக்கால், இருந்தவர்களை "யார்" என்று கேட்டுக் கதவுகளையு மடைப்பித்து குஹ்யமாகவாமருளிச் செய்வது.

(2-9-1 எம்மாவீடு)

65. (எம்மாவீட்டுத்திறமும்செப்பம்) ஒரு தமிழன் "எம்மாவீட்டுவிகல்பமும் செவ்வியவாய்" என்றான். அந்த பக்ஷத்திலே, வீட்டு விகல்பமாவது—ஸாலோக்ய ஸாரூப்ய ஸாமீப்ய ஸாயுஜ்யமென்றவை. செவ்வியவாகையாவது — ஸாலோக்யாதிகளெல்லாம் இம்மோக்ஷத்திலே யுண்டாகை.

(2-9-2 ஈதேயானுன்னை.)

66. (ஞானக்கைதா) இங்கே எம்பார்க்கு ஆண்டான் அருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது. அதாவது, "ஒரு கிணற்றிலே விழுந்தவனுக்கிரண்டுபேர் கைகொடுத்தால், எடுக்குமவர்களுக்கு மெளிதாய் ஏறுமவனுக்கு மெளிதாயிருக்குமிறே; அப்படியே யாயிற்று" என்று.

(2-9-4 எனக்கேயாட்செய்)

67. (தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே என்று ப்ரார்த்திப்பானேன்! தானுள்ளமானபடி செய்கிறான் என்றிராதே" என்று பிள்ளை திருநறையூரரையர் எம்பாரைக்கேட்க; அதுகேளீர்; முன்பு பிரிந்தன்று, பின்பு பிரிவுக்கு ப்ரஸங்கமுண்டாயன்று, இரண்டுமின்றியிருக்க திருமார்விலேயிருக்கச்செய்தே, "அகலகில்லேன், அகலகில்லேன்" என்னப்பண்ணுகிறது விஷயஸ்வபாவமிறே; அப்படியே ப்ராப்யருசி ப்ரார்த்திக்கப் பண்ணுகிறது" என்றருளிச்செய்தார்.

(2-9-8 எக்காலத்தெந்தையாய்)

68. (எக்காலமித்யாதி) இதுக்கு ஆளவந்தார் அருளிச்செய்யும்படி—"இனிக்கூறிட்டசொன்னபடி சிறுகூறான அத்யல்ப காலத்திலும், நீ ஸ்வாமியான முறைதப்பாதபடி என்

ஹ்ருதயத்திலேவந்து புகுரப்பெறில், மற்றெக்காலத்திலும்-இதொழிந்த எல்லாக் காலத்திலும், யாதொன்றும் வேண்டேன், பின்னையிதுதானும் வேண்டேன். ............இத்தை எம்பெருமானார் கேட்டருளி "இதுபொருள் அழகியது, இவ்வாழ்வாருடைய ப்ரக்ருதிக்குச் சேராது, பெறினும் பெறுதொழியினும் சிறுகக்கோலபாட்டார்; இங்ஙனேயாகவேணும் என்றருளிச் செய்வர் (ஈடு ஸேவிக்க.)

(2-10 கிளரொளியிளமை—ப்ரவேசம்.)

69. கீழ் * எம்மாவீட்டிலே சிஷ்கர்ஷித்த ப்ராப்யம் பெறுகைக்குத் திருமலையை யாச்ரயிக்கிறுரென்று ஆளவந்தாரருளிச் செய்தாராகத் திருமலையாண்டான் பணிக்கும்படி எம்பெருமானார்..............(ஈடு ஸேவிக்க.)

(2-10-4 கருமவன் பாசம்.)

70. [கருமவன்பாசம் கழித்துழன்றுய்யவே.] "இது கம்மாற்செய்து தலைக்கட்டப் பேரமோ திருமலையை ஆச்ரயிக்குமதொழிய" என்றிங்ஙனே ஆழ்வான் ஒருருவிலே பணித்தானும், அங்ஙனும் நிர்வஹிக்கக் கடவது. அன்றிக்கே, கருமவன்பாசம் கழிக்கைக்காகவும் உழன்றுய்கைக்காகவும் என்றிங்ஙனே எம்பெருமானார் அருளிச் செய்யும்படி.

(2-10-7 நலமெனநினைமின்).

71. (மலமறுமதிசேர்.) சந்த்ரபதத்துக்கவ்வாலே வளர்ந்து நிற்கையாலே, அவன் போம்போது சிகரங்களிலே தேய்ப்புண்டு சாணையிலேயிட்டாப்போலே ஏளங்கமுற்றிற்றுமென்னுதல்; அன்றிக்கே, திருமலையாழ்வார்தாம் ஜ்ஞாக லாபத்தையுண்டாக்குவர் என்று பிள்ளான் வார்த்தை.

(2-10-8 வலஞ்செய்துவைகல்.)

72. பிள்ளை திருநறையூரரையரும் பட்டரும் ப்ரதக்ஷிணம் பண்ணுகிற்க, பின்னே ஸேவித்துக்கொண்டுபோனேன்; அல்லாதார் கடுங்குதிரைபோலே வாராநிற்க, இவர்கள் திருக்கோபுரங்களையும் திருமாளிகைகளையும் கண்ணாலே பருகுவாரைப்போலே பார்த்துக் கொண்டுவந்தார்கள் என்று நஞ்சீயர் அருளிச்செய்வர். ... ... .... *

# மூன்றாம்பத்து.

---

(3-1-7 வாழ்த்துவார் பலராக.)

73. (வாழ்த்துவார் பலராக) 'ஆனல் தான் உ கதென்? வேதங்களில் அவர்கள் செய்த ஏற்றம் என்?' என்றும் பட்டர் அருளிச்செய்வது. அன்றிக்கே வாழ்த்துவார் பலருண்டாகைக்காக என்னுதல்.

(3-1-8 மாகுணச் சுடருடம்பாய்.)

74 கீழ்ப்பாட்டில், ருத்ரன் தொடக்கமானுர் எத்தமாட்டார்களென்றதாய், இப்பாட்டில் 'அவன் தனக்குங்கூட ஜநகனுன ப்ரஹ்மா ஸ்தோத்ரம் பண்ணினுல் அதுவும் உனக்கு அவத்யமாம்' என்பாருமுண்டு. அவனையும் கீழ்ப்பாட்டிலே சொல்லிற்றுய், இதில் உபய பாவனையுமுடைய இவனைப் போலன்றியே கேவலம் ப்ரஹ்ம பாவனையேயாயிருப்பானொரு ப்ரஹ்மாவை உதப்ரேக்ஷித்து, அவன் எத்தினுலும் தேவர்க்கு அவத்யமாயித்தனையன்றோ? என்கிருர்' என்று பட்டர் அருளிச்செய்யும்படி.

(3-1-9 மழுங்காதவைந்நுதிய)

75. 'மறையாதே' என்ற இதுக்கு 'மறையும் மறையும்' என்று சிற்றாட்கொண்டான் வார்த்தை.

(3-2 முந்நீர்ஞாலம்—ப்ரவேசம்)

76. பட்டர் திருக்கோட்டியூரிலே எழுந்தருளியிருக்கச்செய்தே, சோமப்பிள்ளை இவர் பாத்வாநுபவத்தை பாசைப்பட்டு, அது ஒரு தேச விசேஷத்திலேயோனல் அநுபவிக்கும்படி நோவுபடுகிறாரல்லர்; அவதாரங்களில் அநுபவிக்க ஆசைப்பட்டு, 'பிற்பாடரானேன்' என்று நோவுபடுகிறாரல்லர்; உகந்தருளின நிலங்களிலேயாய், அது தன்னிலும் திருமலையிலேயாகில் அநுபவிக்க இழிந்தது, பின்னை மேன்மேலென அநுபவிக்குமதொழிய இவர் இழந்து நோவுபடுகைக்குக் காரணமென்?' என்று கேட்க, 'பால்யூஹவிபவங்களோடு அர்ச்சாவதாரத்தோடு வாசியற தர்மியைப்பத்தாலே விஷயம் எங்குமொக்கப் பூர்ணமாயிருக்கும். குறைந்து தோற்றுகிறவிடம் ப்ரதிபத்தாக்களுடைய ப்ரதிபத்தி தோஷத்தாலே............ இத்யாதி ஈடு ஸேவிக்க.

(3-2-1. முந்நீர் ஞாலம்.)

77. (ஆக்கையின் வழியுழல்வேன்) நீ ஒன்றை நினைத்துத் தந்தாய்; நான் அதின் வழியே போந்தேன். 'தேப்பத்தை நூக்கிப்போய்ப் பெருமாளை யநுபவிக்கவாயிருக்க 'சரீரம் பாங்கன்று' என்ற நீர் வாக்காலே போய்க் கடலிலே புகுவாரைப் போலே 'இதர விஷயப்ராவண்யத்துக்கு உடலாக்கி அநர்த்தத்தை விளைத்துக்கொண்டேன்' என்றும் எம்பார்.

(இனி வந்து கூடுவனே) 'இனிவந்து கிட்டுகையென்று ஒருபொருளுண்டோ வென்று நிராசராகிறார்' என்று முன்புள்ள முதலிகள், எம்பெருமானார் நிராசராலல் பின்னை முடிவாரொருவர்; ஒன்பதாம் பாட்டில் நிராசராக, பத்தாம் பாட்டில் அவன் வந்து ஸமாதானம் பண்ணினானாக அமையும்' என்று அருளிச்செய்வர்.

(3-2-8. மேவுதுன்பவினைகளை.)

78 "ஓவுதலின்றி மேவுதுன்ப வினைகளை விடுத்துமிலேன்; ஓவுதலின்றி உன்கழல் வணங்கிற்றிலேன்" என்று எம்பார் அருளிச்செய்யும்படி. 'கண்ணலப் பெண்டாட்டிக்கு உண்ண அவஸரமில்லை' என்னுமாபோலே. இந்த்ரியங்களுக்கு இரையிட்டுத் திரிந்தேனித்தனை; எனக்கொன்றும் ஹிதம்பார்த்திலேன்: [ஓவுதலின்றி என்பதற்கு ஓய்வில்லாமையினாலே யென்று எம்பார் திருவுள்ளம்பற்றின பொருள்.]

(3-2-10. தலைப்பெய் காலம்.)

79. [அலைப்பூணுண்ணும்] 'அவ்வல்லல்' என்னுமித்தனை. த்ருஷ்டாந்தமில்லை. அதெல்லாம் காணக்காண விட்டுக் கடக்க நிற்க, 'அத்தோடு ஸஜாதீயமான அல்லல்' என்று எம்பார் அருளிச்செய்வது; அவ்வோபாதி க்லேசப் போருமாயிற்று பரவசத் விச்லேஷத்தால் வருமது, இவர்க்கு. அன்றிக்கே, 'ப்கவதலாபமேயான பின்பு யமவச்யதையும் வந்ததே யன்றோ? என்று அந்த யமவச்யதை போம்படியாக' என்று ஆண்டான் நிர்வஹிக்கும்படி.

(3-3-1. ஒழிவில் காலம்.)

80. ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் இத்திருவாய்மொழி பாடப்புக்கால், "ஒழிவில் காலமெல்லாம், காலமெல்லாம், காலமெல்லாம்" என்று இங்ஙனே நெடும்போதெல்லாம் பாடி, மேல்போக மாட்டாதே அவ்வளவிலே தலைக்கட்டிப் போவாராம்.

(3-3-4. ஈசன் வானவர்க்கு.)

81. (நீசனேன் நிறைவொன்று மிலேன்) நீசத்வத்தையும் நிறைவில்லாமையையுங் கூட்டி இங்ஙனே ஆழ்வாராகப் பண்ணிற்று என்கிறாராயிற்று. (அமர்யாத:)..........' இது ஆளவந்தார் அருளிச் செய்ததேயாகிலும், 'நான் என் வாயால் இப் பாசுரம் சொல்ல மாட்டேன்,' என்னுமாம் அனந்தாழ்வான்.

(நீசனேன் நிறைவொன்றுமிலேன்—) அநாத்ம குணமே என் பக்கலிலே யுள்ளது ஆத்ம குணங்களொன்றுமில்லை 'என் தண்மையும் நிறைவில்லாமையுமிறே நான் இவ் வார்த்தை சொல்லிற்று என்கிறார்' என்பராம் பின்பை திருநறையூரரையர்.

[என் கண் பாசம் வைத்த] என் பக்கலிலே பாசத்தை வைத்த, நித்யஸூரிகளுக்கு ஈசனாயிருந்தான். என் பக்கலிலே ஸங்கத்தைப் பண்ணினான். அவர்கள் ஸத்தை யுண்டாகைக்காக அவர்களோடே கலந்தான். தன் ஸத்தை பெறுகைக்காக என்னோடே வந்து கலந்தான். ப்ராதர்யத்துக்கும் பழிக்கும் செங்கல் சீரைக்கும் ஸ்ரீவசம் வைப்பாரோபாதி அவர்கள் பக்கல்; நெஞ்சும் உடம்பும் தந்தது எனக்கு என்கிறார். அன்றியே, "எனக்குத் தன் பக்கலிலே ஸங்கமுண்டாம்படி பண்ணினான்' என்று நிர்வஹிப்பாருமுண்டு" என்று அருளிச்செய்வர்.

(3-3-6. வேங்கடங்கள்.)

82. (மெய்ம்மேல் வினை முற்றவும்) ப்ரக்ருதி ஸம்பந்த நிபந்தனமாக வரக்கடவ பாபங்களைச் சொல்லுகிறது. ஆக, 'கடன்கள் பெய்ம்மேல் வினை முற்றவும், வேம்—நசிக்கும்' என்று இங்ஙனே ஆளவந்தார் அருளிச்செய்யும்படி. இத்தை எம்பெருமானார் கேட்டருளி, 'இதுக்கு வேதாந்தத்திற் சொல்லுகிற கட்டளையிலே பொருளாக அமையாதோ?' என்று இங்ஙனே அருளிச்செய்வர். அதாவது * உத்தர பூர்வாகயோரச்லேஷ விநாசௌ * என்றும், * ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே * என்றும் சொல்லு கிறபடியே.

.... .... ...

இவ்விடத்திலே பட்டர் ஒரு இதிஹாஸம் அருளிச் செய்வர்; 'பண்டு, தலையில் மயிரின்றிக்கே யிருப்பானொருவன் நெல் பரிமாறு நின்றானாய், அங்கே ஒருவன் சென்று 'மயிரைப்பேணாதே நீர் தனியே நின்று பரிமாறு கின்றீர்' என்ன, 'என் தான் பட்டதே! என்ன, 'ஒன்றுமில்லை; கண்டுபோக வந்தேன்' என்ன, 'ஆகில் ஒரு கோட்டையைக் கொண்டுபோகலாகாதோ?' என்று எடுத்துவிட, அவன் அத்தைக்கொண்டு வாரா நிற்கச் செய்தே நாதிமே ஒருவன் வந்து 'இது எங்கே பெற்றது?' என்ன, 'உன்தனை மொட்டைத் தலையன் தந்தான்' என்றானாய், அவன் அத்தைச் சென்று அங்கே 'இன்னான் உம்மை வைதுபோகா நின்றான்!' என்ன, 'அடா! என் நெல்லையுங் கொண்டு என்னையும் வைது போவதே?' என்று தொடர்ந்து வந்தானாய், அவன் புரிந்து பார்த்து 'ஏன்தான்! முழுக்க அலைவலைய ஓடிவாரா நின்றதி!' என்ன, 'ஒன்றுமில்லை, இன்னம் ஒரு கோட்டை கொண்டுபோகச் சொல்ல வந்தேன்' என்றானாம். அப்படியே கடலை முகங்காட்டுவித்துக் கொள்ளுகைக்காகக் காலைப்பிடிப்பது கோலைத்தொடுப்பதாகா நிற்க, அவன் வந்து முகங்காட்டினவாறே, 'உனக்கு அம்பு தொடுத்தோம்' என்ன லஜ்ஜித்து, 'உன் விரோதிகளைச் சொல்லு, நாம் இத்தை விட' என்றாரிறே.

....

(தாங்கள் இத்யாதி)... அதிகாரி வைலக்ஷண்யமும் வ்ருத்தி வைலக்ஷண்யமும் தோன்றும்படி 'தாங்கள் தங்கட்கு' என்று இங்ஙனே ஊன்றிச் சொல்லுமாம் அனந்தாழ்வான்.

(3-3-7. சுமந்து மாமலர்.)

83. [சுமந்து இத்யாதி]... 'ஸ்ரீ புருஷோத்தம முடையானுக்கு ராஜபுத்ரன் செண்பகப் பூக்கொண்டு சாத்தினபடியை நினைப்பது. அதாவது—ஸ்ரீபுருஷோத்தமமுடையான் செண்பகம் உகந்து சாத்துவர்; சில ராஜபுத்ரர்கள் செண்பகங்கொண்டு சாத்தத் தேடி, முன்பே பூவெல்லாம் விற்றுப்போய் ஒரு பூ இருந்தது கடையிலே; அப்பூவுக்குச் செருக்காலே ஒருவர்க்கொருவர் த்ரவ்யத்தைப் போர ஏற்றி இவர்களில் ஒருவன் நினைக்க வொண்ணாதபடி த்ரவ்யத்தைப் போர இட்டுக்கொண்டு வந்து சாத்தினான்; அன்று இராஸ்வப்னம் காண்கிறான்; 'நீ யிட்ட பூ எனக்குக் கனத்துச் சுமக்க வொண்கிறதில்லை' என்று அருளிச்செய்தார்.

(3-4-2. கூவுமாறறிய மாட்டேன்.)

84. "பெரும்புறக்கடல்" என்கிற திருமொழி—நிர்வஹிக்கிற க்ரமத்திலே குன்றங்களனைத்தும் என்றது. "நின்ற குன்றத்தினை நோக்கி" என்னுமாபோலே வடிவுக்குப் போலியாய், 'மேவுசீர் மாரி' யென்று மேகத்தைச் சொன்னவிடம் நிறத்துக்குப் போலியாயிருக்கிறது என்று நிர்வஹிப்பாருமுண்டு.

(3-4-4. சாதிமாணிக்க மென்கோ.) (அவதாரிகை)

85. நம் முதலிகளிலே ஒருவரை ஒருவன் 'எனக்கு எம்பெருமானை நினைக்க விரகு சொல்லவேணும்' என்ன, 'நான் உனக்கு அது சொல்லுகிறேன்; நீ எனக்கு அவனை மறக்க ஒரு விரகு சொல்ல வல்லையே!' என்றாராம். அதுக்குக் கருத்து.......இத்யாதி ஈடு ஸேவிக்க.

... ... ...

(ஆதுமில் இத்யாதி).... 'நாமரூபங்களையுடையனவாய் வந்தவாகச் சொல்லலாம்படி பிரிய நின்றபோதும் இவற்றோடே கலந்து இவற்றின் தோஷம் தன் பக்கல் தட்டாதபடி நிற்கும்; இவை 'தான்' என்கிற சொல்லுக்குள்ளே யாம்படி கலந்து நின்ற போதும் தர்கத தோஷாஸம்ஸ்ப்ருஷ்டனாயிருக்கும் என்றதாகிறது' என்று அருளிச் செய்வர். அதுக்கு அடி ப்ரவேச ஹேது விசேஷம்.

(3-4-6. பாலேபோல் சீரின்கோ.)

86. (மால் என்கோ) ஆச்ரித விஷயத்தில் வ்யாமுக்தனென்பேனோ? இப் பாசுரத்தைச் சொல்லா, * இதம் தே நாதபஸ்காய * என்னும் வ்யாமுக்தனென்பேனோ?' " * இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாமி * என்ற வோபாதி, * இதம் தே நாதபஸ்காய * என்றதும் முன்னே சொல்லிக்கொள்ளவிறே அடுப்பது; அங்ஙனன்றிக்கே, முந்துறச் சொல்லி, பின்னை * இதம் தே நாதபஸ்காய * என்றானிறே; இதுதனக்கு அடியென்?" என்று ஜீயர் பட்டரைக் கேட்க, " த்ரௌபதி குழலை விரித்துக் கிடக்கையாலே அது முடிக்கைக்காக, செய்வதறியாமையாலே மூலையில் கிடந்தாரை முற்றத்தே யிட்டான்; பின்னை அர்த்தத்தின் சீர்மையை அநுஸந்தியா, 'ஆர் அதிகாரிகளாகச் சொன்னோம்? கைப்பட்ட மாணிக்கத்தைக் கடலிலே யிட்டோம்' என்று பதண் பதண் என்றான் காணும்" என்று அருளிச் செய்தார்.

(3-4-10 யாவையும் யவருந்தானாய்.)

87. (ஆவிசேர் இத்யாதி.) ஆவியுண்டு-ப்ராணாச்ரயமான சரீரம்; அத்தோடு சேர்ந்திருந்துள்ள உயிருண்டு ஆத்மா; அதின் பக்கல் அந்த சரீரகதமான பால்யயௌவநாதிகளொன்றாலும் ஒரு ஸம்பந்தமுமில்லையாம்படியாக அநுஸந்திக்கிற அநுஸந்தானமானது அந்த ஆத்மாவுக்குக் கூடாநின்றபின்பு, அப்பொருள் அவனையுங்கூடத் தட்டில்லை. இவ்வளவிற்கே, 'இதுக்கு வேறேயும் இரண்டுபொருள் சொல்லுவர்கள்' என்று அருளிச்செய்வர்: அவன் பக்கலிலே பக்தியுண்டாகில் அவனைக் கிட்டலாமென்றும்; புறம்புண்டான உபாயாந்தரங்களிலுண்டான பற்றடையவிட்டு, அவனையே பற்றில் அவனைக் கிட்டலாமென்றும். அன்றியே, அந்திம ப்ரத்யயம் உண்டாமாகில் அவனைக்கூடலாமென்றுமாம். இத்தை எம்பெருமானார் கேட்டருளி, கீழ் வ்யாப்தியைச் சொல்லிநின்றபின்பு, இனி வ்யாப்யவஸ்துகதமான தோஷங்கள் வ்யாபகனானவனுக்குத் தட்டாதென்னுமிடம் அவச்யம் சொல்லவேணுமாய்; ஆனபின்பு, இத்தையே சொல்லிற்றாக அமையும்' என்று அருளிச்செய்வர்.

(3-5-1. மொய்ம்மாம்பூம்பொழில்.)

88. [எம்பானை] ஆனைக்கு உதவின அத்தாலே அதன் சிறை விட்டது, அந்நீர்மையிலே தாம் சிறைப்பட்டார். ஒரு ஜந்மமாதல், ஒரு ஜ்ஞானமாதல், ஒரு வ்ருத்தமாதல் ஒன்றுமின்றிக்கே ருசிமாத்ரமேயான ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுக்கு உதவினபடியை அநுஸந்தித்து, 'இது என்ன நீர்மை?' என்று அதிலேயாயிற்று இவர் அகப்பட்டதாயிற்று. பட்டர் இவ்விடத்தை அருளிச் செய்யாநிற்கச்செய்தே மேலேயும் இயலைச் சொல்லப் பண்ணி "அவன் நூறாயிரஞ்செய்தாலும் விக்ருதராகாதிருக்கும்போதும் நாமே வேணும்; நமக்கு ஒரு ஆபத்து உண்டானால் இருந்தவிடத்திலே இருக்கமாட்டாதே விக்ருதனும் போதும் அவனே வேணும்" என்று அருளிச்செய்தார்.

(3-5-4. வம்பவிழ்கோதை.)

89. [தம் பிறப்பால் இத்யாதி]... வைஷ்ணவர்கள் நடுவே இவர்கள் சரீர பரிக்ரஹம் பண்ணிற்று என்ன ப்ரயோஜநத்துக்காக? 'திருப்புன்னைக் கீழே ஒருவர் இருக்குமிடத்திலே நம் முதலிகள் பத்துப்பேர் கூட நெருக்கிக் கொண்டிருக்கச் செய்தே, ப்ராஹ்மணிகள், பயிரேழுந்த பிசல்களும், பெரிய வடிவுகளும், மேலே சுற்றின இரட்டைகளுமாய் இடையிலே புகுந்து நெருக்குமாபோலே காண்' என்று பின்னைப் பிள்ளை.

(3-5-5. சாது சனத்தை நலியும்.)

90. [அங்கு வைத்து இங்குப் பிறந்த].........இப்படி பிறவாநின்றாலும், * நைஷ கர்ப்பத்வமாபேதே ந யோந்யா மவஸத் ப்ரபு:* என்கிறபடியே கர்ப்பத்தில் அந்வயமில்லை. 'இதுதான் கூடுமோ?' என்னவொண்ணாதிறே; இக்ஷ்வாகு வம்சத்திலே யுவநாச்வன் என்பானொருவன் மந்த்ரபூதமான ஜலத்தைப் பானம் பண்ண, அவன் வயிற்றிலே கர்ப்பமுண்டாயிற்றிறே ஒரு சக்தி விசேஷத்தாலே; பிதுகமாய் ஸர்வர்க்கித்துப் பிறந்ததுமில்லையிறே அங்கு: அப்படியே யிங்கும் ஸர்வசக்தி யோகத்தாலே இவ்வர்த்தம் உபபந்நமாகத் தட்டில்லையிறே.

(வீதிகள் தோறும் துள்ளாதார்) மிளகாழ்வான் வார்த்தையை நினைப்பது. [மேலே 3-5-8ல் இதன் விவரணம் கண்டுகொள்வது.]

.... .... ....

கீழில் திருவாய்மொழியிலே ததீயத்வாகாரத்தாலே இவ்விபூதியாக உத்தேச்யமென்று அநுபவித்தார்; இத்திருவாய்மொழியிலே இவ்விபூதி தன்னிலே 'என்னுடைய ப்ரானி

டத்தை என்னுதபோதெல்லாமினியவாறே' என்றும், 'போராளன்பேரோதப் பெரியோரை யொருகாலும் பிரிகிலேனே' என்றும் சொல்லுகிறபடியே சிலரைக் கழித்துச் சிலரைக் கூட்டிக்கொள்ளா நின்றார்; இங்குச்செய்ததாகிறது என்? என்னில்; இவ்வாகாரமும் கிடக்கச் செய்தே, கீழ் உபாதேயமென்று அநுஸந்தித்தார் ததீயத்வாகாரமே தோற்றி, ஆகாராந்தரம் தோற்றுதபடியான பாகம் பிறந்தவாறே. 'இவர் தாம் எல்லார் படிகளுமுடையராயிறே இருப்பது, முக்தர் படியையுடையரென்னுமிடம் சொல்லிற்று கீழ்த்திருவாய்மொழியாலே; முமுக்ஷுக்கள் படியையுடையரென்னுமிடம் சொல்லிற்று இத்திருவாய்மொழியாலே' என்று அருளிச்செய்வர்.

(3-5-6. மனிசரும் மற்றும் முற்றுமாய்.

91. [முனிவின்றி யேத்திக் குனிப்பார்] முனிவின்றி பகவத் குணங்களைக் கேட்டால் அஸூயை பண்ணாதே ஏத்துமவர்கள்.........அன்றிக்கே, 'முனிவாகிறது முசிர்வாய், அதின்றிக்கே யொழிகையாவது கலக்குகையாய், அடைவுகெட்டு ஏத்திக் குனிப்பாரென்னவுமாம்' என்று அருளிச்செய்வர்.

(3-5-7. சீர்மையில் நூற்றுவர் வீய.)

92. (உத்தமர்கட்கு என் செய்வாரே).... ஆயிரத்தளியிலே ராஜா இருக்கச் செய்தே பெரிய நம்பியையும் ஆழ்வானையும் நலித்தானாய், ஆழ்வான் மடியிலே சாய்ந்துகிடக்கச் செய்தே பெரியநம்பி திருநாட்டுக்கு எழுந்தருளினார்; அவ்வளவிலே 'ஒருவருமில்லாதாரை ப்ரதிபத்தி பண்ணக்கடவோம்' என்று திரிகிறார் சிலர் அங்கே வந்து ஆழ்வானைக் கண்டு 'ஒருவனுண்டிறே' என்று போகப்புக, ஒருவரையும் ஒரு குறை சொல்லியறியாதவன், 'வாரீகோள் மாணிகாள்! வைஷ்ணவனுமாய் ஒருவனுமில்லாத ஒருவனைத் தேடி ப்ரதிபத்தி பண்ண இருக்கிறீகோளோ நீங்கள்? ஈச்வரனும் ஈச்வர விபூதியும் வைஷ்ணவனுக்குக் கிஞ்சித் கரிக்கவிருக்க, வைஷ்ணவனுமாய் அறவயருமாயிருப்பானொருவனை நீங்கள் எங்கே தேடுவீகோள்?' என்றானும். [ப்ரதிபத்தி பண்ணுகையாவது—ஸத்காரம் செய்கை.]

(3-5-8. வார்புனலந்தணருவி.)

93. (பிறர் கூற) வைஷ்ணவர்களங்கீகாரம் பெறு[illegible]ம் அவைஷ்ணவர்கள் 'இவன் நமக்கு உடலல்லன்' என்று கைவிடுகைதான் உத்தேச்யமாயிருக்குமிறே: ராவணன் * த்வாம் து திக் குலபாம்ஸநம் * என்றதுதன்னை உத்தேச்யமாக நினைத்தானிறே விபீஷணாழ்வான்; பிள்ளையாழ்வான் வார்த்தை—ராஜா அகார் வைக்கிறானாய் அங்கே செல்ல, 'உமக்குப் பங்கில்லை' என்ன, 'அதுவென்? வேச பரீக்ஷை வேணுமாகில் அத்தைச்செய்வது, சாஸ்த்ர பரீக்ஷை வேணுமாகில் அத்தைப் பரீக்ஷிப்பது' என்ன, 'உமக்கு அவையெல்லாம் போதும்; அதுக்கு உம்மைச் சொல்லவொண்ணாது' என்ன, 'ஆனால் எனக்குக் குறையென்?' என்ன, நீர் வைஷ்ணவரன்றோ; ஆகையாலே காண்' என்ன, புடவையை முடிந்து எறிட்டுக் கூத்தாடினானாயிற்று, தன்னை அவர்கள் கைவிட்டதுக்கு.

(3-6-6. தோற்றக்கேடவையில்லவன்.)

94 (அடிக்கீழ்ப்புகநின்ற செங்கண்மால்) 'ஹிரண்யன் பக்கல் சீற்றமும் செல்லாநிற்க, ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்குக் கிட்டலாயிருந்தபடி எங்ஙனே?' என்று எம்பெருமானாரைச் சிலர் கேட்க, 'விப்ஹரம் ஆனைமேலே சீறினாலும் குட்டிக்கு முலையுண்ணலாம்படி யிருக்குமிறே' என்று அருளிச்செய்தார். 'ஆச்ரித வாத்ஸல்யத்தாலே அவர்கள் விரோதிகள்மேலே சீறின சீற்றமானால் பின்னை அவர்களுக்கு அணையவொண்ணாதபடி யிருக்குமோ?' என்று அருளிச் செய்தார்.

(3-6-8 தூயநமேதரு.)

95. (அன்றி மற்றிலேன் தஞ்சமாகவே) இவ்விடத்தை பட்டர் அருளிச்செய்யாநிற்க, சீயர், இவர் புக்கவிடமெங்கும் இப்படியே சொல்லுவர்; இவர்க்கு இது பணியேறே' என்ன 'இவர் மற்றோரிடத்தில் தலைசீட்டுவது பாவகத்வத்தைப் பற்ற; இவர் தஞ்சமாக நினைத்திருப்பது சக்கரவர்த்தி திருமகனையே' என்று அருளிச்செய்தார்.

பட்டர் ராமாவதாரத்தில் பக்ஷபாதத்தாலே அருளிச்செய்யுமது கேட்கைக்காக சிறியாத்தான் "பெருமாளுக்கு எல்லாவேற்றங்களும் அருளிச்செய்ததேயாகிலும், பாண்டவர்களுக்காகக் கழுத்திலே ஓலைகட்டித் தூதுபோன க்ருஷ்ணனுடைய நீர்மையில்லையே சக்ரவர்த்தி திருமகனுக்கு" என்ன. "அதுவோ! பெருமாள் தூதுபோகாமையன்று காண்; இக்ஷ்வாகு வம்ச்யரைத் தூதுபோக விடுவாரில்லாமைகாண்" என்று அருளிச்செய்தார்.

எம்பெருமானார் திருவாராதனம் பண்ணிப்போருவது ஒரு பிள்ளையிறே; இங்ஙனே யிருக்கச்செய்தே ஒருநாள் ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் சக்ரவர்த்தி திருமகனை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்து கொடுத்தாராய், அவரைப்பார்த்து "இந்த * மாமேகம் சரணம் வ்ரஜ * என்று நீ தலைவிடாதார் எழுந்தருளினார்" என்றாராம்.

...... "ஒரு சிறுலை விச்வஸித்து ஆறுபாலத்துக்கு வேண்டும் சோறும் தன்வயிற்றில் ஏற்றிக்கொண்டு கடலிலே இழியாநின்றான். அவ்வோபாதி விச்வாஸமாகிலும் வேண்டாவோ பகவத் விஷயத்தைப் பற்றுவார்களுக்கு?" என்று அருளிச்செய்வர்.

(3-6-9. தஞ்சமாகியதந்தை.)

96. (அவனாகும் நீள்கடல் வண்ணனே) ......அங்குத்தைக்கு உகந்தருளினவிடத்தை விபூதியாக நினையாதே, இங்குத்தைக்கு அவ்விடத்தை விபூதியாக நினையுங்கோள்" என்று பணிக்கும் ஆண்டான்.

(3-7 பயிலுஞ்சுடரொளி—ப்ரவேசம்.)

97. * தத்பக்ஷைர் வா ஸமாகம: * என்கிறவிடத்தில் 'வா' என்றதை அவதாரணத்திலே யாக்கி, 'உத்தேச்யத்தானே இங்கே ஸித்திக்குங்காண்' என்று எம்பெருமானார் அருளிச்செய்தவார்த்தை.

...... (கச்சதா)—இதுக்கு எம்பெருமானார் "* பயிலுஞ்சுடரொளியிலும் * நெடுமாற்கடிமையிலும் சொல்லுகிற அர்த்தத்தை ஸ்ரீ சத்ருக்னாழ்வான் அனுஷ்டித்துக் காட்டினான்' என்று அருளிச்செய்வர்.

...... எம்பெருமானார் இச்ச்லோகத்துக்கு வாக்யார்த்தமாக, 'ஸ்ரீ சத்ருக்னாழ்வான் பெருமாளுக்கு நல்லனானபடி—பெருமாளைக் கால்கடைக்கொண்டு, பெருமாளுக்கு நல்லனான ஸ்ரீ பரதாழ்வானையல்லது அறியாதபடியானான்' என்று அருளிச்செய்தார்.

(3-7-1. பயிலுஞ்சுடரொளி.)

98. [பயில இனிய] ......"பண்டிவரை" இத்யாதி. முதல்நாள் கண்டால் ஸ்வாபாவிக சேஷித்வத்தாலும் முகத்தில் தண்ணளியாலுமாக, காணாது கண்டவனுக்கும், 'பண்டு கண்டுவிட்ட முகமோ?' என்று தோற்றியிருக்கும்; சிலநாள் பரிசயித்தால் 'பண்டு இவரை நாம் கண்டறியோம்!' என்று தோற்றியிருக்கும். இரண்டுக்கும் சப்தம் ஒத்திருக்க இவ்வர்த்தத்தைக் காட்டும்படி எங்ஙனே? என்று நான் கேட்டேன்; "பயில்கின்றனரால்"

என்று ப்ரதம தசையோடு சரமதசையோடு வாசியற வார்த்தை இதுவேயாயிருந்தது கண்டீரே என்று அருளிச்செய்தார்.

(3-7-2. ஆளும் பரமனைக் கண்ணனை.)

99. [நான்கு] பட்டர் திருக்கோட்டியூரிலே எழுந்தருளியிருக்கச் செய்தே அனந்தாழ்வான் கண்டு, 'பரமபதத்தில் ஸர்வேச்வரன் சதுர்ப்புஜனாயோ த்விபுஜனாயோ எழுந்தருளியிருப்பது?' என்ன, 'ஏகாயநர் த்விபுஜன் என்னுகின்றார்கள்; நம்முடையவர்கள் சதுர்ப்புஜன் என்று நின்றார்கள்' என்ன, 'இரண்டிலும் வழியேது?' என்ன, 'த்விபுஜனாயிருந்தானாகில் பெரிய பெருமாளைப்போலேயிருக்கிறது; சதுர்ப்புஜன் என்று தோற்றிற்றாகில் பெருமாளைப்போலேயிருக்கிறது' என்று அருளிச்செய்தார்.

..........கிலாத்துக்குறிபகவர், பட்டரை, 'ஸ்ரீவைகுண்டத்திலே சதுர்ப்புஜனாயிருக்கு மென்னுமிடத்துக்கு ப்ரமாணமுண்டோ?' என்ன * தமஸ: பரமோ தாதா சங்கசக்ர கதாதர: * என்று உண்டாயிருந்ததே' என்ன, உத்தரமில்லாமையாலே விக்ருதராக 'ப்ரமாணகதி இதுவாயிருந்தது; பொறுக்கலாகாதோ?' என்று அருளிச்செய்தார்.

(3-7-3. நாதனை ஞாலமும்.)

100. [வல்லாரைப் பணியுமவர் கண்டீர்.]..... "பிள்ளையாத்தான் என்று பேரா கல்லனாயிருப்பானொருவன், ஜீயர் ஸ்ரீபாதத்திலே வந்து 'எனக்கு ஒருரு திருவாய்மொழி அருளிச்செய்யவேணும்' என்ன, 'உனக்கு விசதமாவன பிள்ளையோடே கேட்டாலாயிற்று; அங்கே கேள்' என்ன, 'அவரைத் தெண்டனிட வேணுமே' என்ன, 'அது ஒன்று உண்டோ? வேணுமாகில் செய்கிறோம்' என்று, என்னையழைத்து, 'இவனுக்குப் பாங்கானபடி ஒருரு திருவாய்மொழி சொல்லும்' என்ன, இவ்வளவும் வரக் கேட்டவாறே என்னை மிகவும் அநுவர்த்திக்கப் புக, நான் ஒட்டாதொழிய, ஜீயர் பாடே சென்று 'இவ்வர்த்தத்தினுடைய சீர்மையறியாமையாலே முன்பு அப்படிச் சொன்னேன்; இனி நான் அநுவர்த்தித்ததுக்கு இசையும்படி அருளிச்செய்யவேணும்' என்று ஜீயரையிட்டு விர்ப்பந்தித்து அநுவர்த்தித்தான்" என்று அருளிச்செய்வர்.

... ... ...

..........வீரப் பிள்ளையும் பாலிகை வாளிப் பிள்ளையும் என்று இருவர் ஜீயர் ஸ்ரீபாதத்துக்கு ஏகாந்தராய், தங்களிலே செறிந்து போந்தார்களாய்த் தேசாந்தரம் போனவிடத்தே வெறுப்புண்டாய்த் தங்களில் வார்த்தை சொல்லாதேயிருக்க, இவர்களைப் பார்த்து "பிள்ளைகாள்! அர்த்த காமங்கள் த்யாஜ்ய மல்லாமையோ, பகவத் விஷயம் அராட்டுப் பிராட்டாயோ ஒரு ஸ்ரீவைஷ்ணவனும் ஸ்ரீவைஷ்ணவனும் தங்களிலே வார்த்தை சொல்லாதே வெறுத்திருக்கிறது?' என்ன, இருவரும் எழுந்திருந்து தெண்டனிட்டு ஸங்கதராய்ப்போனார்கள்.

(3-7-10. அடியார்ந்த வையமுண்டு).

101. (அடியார் இத்யாதி)........ இப்போதும் தம்முடைய ருசிக்கு அவதியுண்டாய் இவ்வளவிலே நின்றாரல்லர்; சந்தஸ்ஸில் இதுக்கு அவ்வருகு போகவொண்ணாமே நின்றதித்தனையிறே. 'இப்படி வைஷ்ணவர்களை விரும்பினால் இது வெளிகரோடு சேரா இருக்குதாகில் ஆழ்வார் விருப்பினத்தை விச்வவித்தோ யாகிறோம்' என்று ஜீயர் அருளிச்செய்யும்படி.

(3-8. முடியானே; ப்ரவேசம்)

102. குஹேந ஸார்த்தம் தத்ரைவ ஸ்த்திதோஸ்மி திவஸாந் பஹூந்)—ஸ்ரீ குஹப் பெருமாளோடேகூடி, பெருமாளைப்பிரிந்த விடத்தில்நின்றும் கால்வாங்கமாட்டாதே

ணயிற்று ஸுமந்த்ரன்; அங்கு நின்றது ஒன்றிரண்டு நாளாயிருக்கச்செய்தே (பஹூஸ்) என்னுமின்றதாயிற்று; பிரிவாலே காலம் நெடுகினபடி. 'ஸ்ரீகுஹப்பெருமாளோடே நிற்க, காலம் நெடுகுவானென்?' என்று பிள்ளைகாழ்வானைக்கேட்க, 'ஸ்மாரக ஸந்நிதியில் ஆற்றாமை இரட்டிக்குமிறே' என்று அருளிச்செய்தாராம்.

(3-8-9 கோள்வண்நான் மாவலி)

103. [உன்னை எஞ்ஞான்று பொருந்துவனே] ..........*அநந்யா ராகவேணாஹம்* ..........'அநந்யா' என்கிற பிராட்டியினுடைய வார்த்தை எல்லார்க்குஞ் சொல்லலாம்படியிறே ஸ்வரூபத்தை யுணர்ந்தால் இருப்பது: ஈச்வரனிலும் பிராட்டிமார்க்கு பேதஞ்சொல்லுகிற ப்ரமாணங்களெல்லாம்—அல்லதாரோபாதி பிரிவுண்டென்னுமிடம் சொல்லுகிறன; ஐக்யஞ்சொல்லுகிற விடமெல்லாம்—'பாரதந்த்ர்ய காஷ்டையைப் பற்றச் சொல்லுகிறன' என்று ப்ராஸங்கிகமாக ஒருநாளிலே அருளிச்செய்தார்.

(3-9-2. உளனாகவேயெண்ணி)

104. (மதிக்கும்)—தானே இத்தைக் குவாலாக மதிக்குமித்தனையிறே. புறம்பு இத்தை நன்றாக நினைக்கைக்கு இவன்தனை அவஸ்துக்களில்லையே. கல்ப்ரஹ்மதேசத்திலே கரிக்கால்சோழ ப்ரஹ்மராயன் 'திருவாய்மொழிக்கு வ்யாக்யானஞ் செய்தேன்' என்று நீயர்க்கும் காட்ட, அவன் பக்கல் உபஜீவநங்களை நினைத்து, பிள்ளையை 'நீர் இத்தைக் கேட்டு வாரும்' என்று அருளிச் செய்ய, இவரும் கேட்டு, 'ஆழ்வார் திருவுள்ளத்தை அடியொற்றி அவர் போனவழியே போம்படியே!' என்ன, 'ஆ! ஆ! பிள்ளை! ஆழ்வார்க்கும் எனக்கும் வாசி புத்திபண்ணிற்றிலையே? க்ராம கார்யஞ்செய்து இடையிலே இதுவுஞ் செய்யவேண்டிற்றே' எனக்கு என்றான்.

[கண்ணன் குறுங்குடி]—ஸர்வேச்வரன் 'என்னது' என்று அபிமானித்து வர்த்திக்கும் நகரமாயிற்று. 'கண் நல் குறுங்குடி' என்று வ்யாக்யானம் பண்ணினார்கள் தமிழர்; அப்போது, இடமுடைத்தாய் நன்றான திருக்குறுங்குடியிலே யென்று பொருள்.

(3-9-6. வம்மின் புலவீர்.)

105. [நும் மெய்வருத்திக் கை செய்து உய்ம்மினோ] இதுக்கு எம்பாருளிச்செய்யும்படி ;—கோட்டை சுமத்தல், புல் செதுக்குதல் செய்யமாட்டீர்களோ என்று.

(3-9-7. சேருங்கொடை புகழ்.)

106. [பாசில் ஓர் பற்றையை]......அன்றிக்கே, பாரென்று நத்தமாய், அத்தால்—ஒரு குடிப்பற்றின் றிக்கே யிருக்கை. பற்றையை—கைப்பட்டத்தை இறுகப் பிடித்து ஒருவர்க்கு ஒன்று ஈயாதவர்களை என்று ஒரு தமிழன் வியாக்கியானம் பண்ணினான். த்ருணஸ்யமன் என்று சொல்லிப்போருவது.

(3-9-9. வாய்கொண்டு மானிடம்பாட.)

107. [வீடும்தரும் நின்று நின்றே.] இப்படி முழுக்கக் கொடுத்தாலும் இவனுக்கு நாமொன்றும் செய்யப் பெற்றிலோமேயென்று * ருணம் ப்ரவ்ருத்தமிவ மே * என்று திருவுள்ளத்தாலே மிறுக்குப்பட்டு நிற்கும் என்று நம்மாசார்யர்கள் நிர்வஹிக்கும்படி. ஒரு தமிழன் 'அடைவடைவே தரும் சொன்னவற்றை' என்றான்.

(4-3-3. ஏகமூர்த்தி.)

113. (ஆவியல்லல்மாய்த்ததே) உன் திருவுள்ளத்திலுண்டான அல்லல் ஒருபடி ஶமிக்கப்பெற்றதே. இத்தலையை ஒருபடி கரைமரஞ் சேர்த்து நீ க்ருதக்ருத்யனானாயே!. அன்றிக்கே, என்னுயிரானது நிர்துக்கமாயிற்றென்றுமாம். அதவா, ஏகமூர்த்தியென்று—பரத்வத்தைச்சொல்லி, இருமூர்த்தியென்று—வ்யூஹத்தைச்சொல்லி, வாஸுதேவ ஸங்கர்ஷணர்களை நினைத்து, மூன்று மூர்த்தியென்று - ப்ரத்யும்நனைச்சொல்லிற்றாய், பலமூர்த்தியென்று - விபவங்களைச் சொல்லிற்றாய், ஐந்துபூதமாயிரண்டு சுடராயென்று - இன்னார் ஸ்ருஷ்டிக்குக்கடவர், இன்னார் பாலனத்துக்குக் கடவர், என்கிறபடியாலே சொல்லுகிறதென்று நிர்வஹிப்பாருமுண்டு.

(4-3-8. என்னதாவி மேலையாய்.)

114. (உன்னதென்னதாவியு மென்னதுன்னதாவியும்) என்னுடையவாவி யுன்னது, உன்னுடைய ஆவி யென்னது. என் ஸ்வரூபம் நீயிட்ட வழக்கு, உன் ஸ்வரூபம் நானிட்ட வழக்கு. இவ்விடத்தை ஆளவந்தார் அருளிச்செய்யா நிற்கச்செய்தே இருந்த முதலிகளிலே சிலர், "இவ்வாத்மாவின் ஸ்வரூபமவனிட்ட வழக்கென்றால் கூடுமே, அவன் ஸ்வரூபமிவனிட்ட வழக்காகையாவதென்" என்று கேட்க, "இவன் 'தன்னை அவனுக் காக்குவன்' என்றவன்று, கர்மபதனையுங்கூடும், 'இவன் ஸ்வரூபமவனிட்ட வழக்காகக்கூடுமோ' என்று இதிலே காணும் ஸந்தேஹிக்கவேண்டுவது" என்றருளிச்செய்தார்.

(4-4-4. ஒன்றிய திங்களைக்காட்டி.)

115. (நெடுமாலே வாவென்று கூவும்) "வடிவில் பெருமையைக் கண்டவாறே, 'ஜகத்தையடைய தன் திருவடிகளின் கீழே யிட்டுக்கொள்ளும்படி பெரிய வடிவையுடைய திருவுலகளந்தருளின ஸர்வேச்வரன்' என்று நினைத்து, இங்ஙனே வாராயோவென்றழைக்கும்" என்று பிள்ளான் பணிக்கும்; அங்ஙனன்றிக்கே, ஜீயர் "மலை பேரமாட்டாதே, பலகால் வர்ஷிக்கையாலே அழுக்கற்றுப் பசுகுபசுகு என்றிருக்குமே; அத்தைக் கண்டு, 'அவன் ஸாபராதனாகையாலே லஜ்ஜிதனாய், வந்துவிடமாட்டாமையாலே பச்சைப் படாத்தையிட்டு முட்டாக்கிட்டு நிற்கிறான்' என்று, ஆனைக்கூட்டத்துக்கு கதயடியன்றோ உமக்கு லஜ்ஜிக்கவேண்டுவது, இங்ஙனே போரீரென்று நின்றான்" என்று.

(4-5-1. வீற்றிருந்து.)

116. (வெம்மாபிளந்தான்றன்னை) "ஆற்றல்மிக்கானைப் பாட சொல்லுகிறது" என்று பட்டருளிச்செய்யும்படி; "ஆற்றல்மிக்கானை யம்மானென்றால், இன்னுமிக்கிறது"—என்று அம்மங்கியப்பான் நிர்வஹிக்கும்படி.

(4-5-6. கரியமேனிமிசை.)

117. (கரியவித்யாதி) கறுத்த நிறத்தாலே வந்த அழுக்குக்குமேலே அதுக்குப் பரபாகமான திருக்கண்களிலே அஞ்சனத்தை யிடுமென்றுமாம். அன்றிக்கே, "கரியென்று - ஆனையாய், அத்தால் நினைக்கிறது - குவலயாபீடமாய்; குவலயாபீடமானது, அம்மேனியிலே - அழகிய திருமேனியிலே, வெளிய - சிற, அத்தை, நீறுசெய்தேயிடும் - பொடியாக்கும்" என்றொரு தமிழன் நிர்வஹித்தான்.

(4-5-7. என்றுமொன்றாகி.)

118. (தன்றனக்கின்றின்றனை) எம்பெருமானார் தெற்கேயெழுந்தருளுகிற நாளிலே ஆளவந்தார் மகனார் சொட்டைநம்பி ப்ரார்த்தித்த வார்த்தை - "தன்றனக்கென்

றது — தானனதனக்கென்றபடி. ஒருவகைக்கொப்பின்றிக்கே யிருக்கிறது பரத்வத்தி லல்ல, 'ஆத்மாநம் மாநுஷம் மந்யே' என்கிறபடியே - அவதரித்து மனிச்சேறிட்டுக் கொண்டு நிற்கிற நிலையிலே" என்றாராம்.

(4-0-5. மைகலும் பூவின்மிசை.)

119. (லோகநாத:புராபூத்வா ஸுக்ரீவம்நாதமிச்சதி) கிடைப்பது கிடையாதொழி வது; இச்சியா நின்றார். ["ஸுக்ரீவம் சரணம்கத:"] "ஸ்ரீ விபீஷணாழ்வானைப் புகுர வொட்டேன்' என்றார் மஹாராஜர், 'இவன் புகுராவிடில் நாமுமில்லோமாவோம்' என்கிறார் பெருமாள், இப்படி யிருவரும் விப்ரதிபத்தி பண்ணின விதுக்குக் கருத்தென்" என்று ஜீயர்கேட்க; "இருவரும் 'சரணாகதரானவர்களோ விடோம்' என்று விப்ரதிபத்தி பண்ணு கிறார்கள் காணும்" என்று பட்டருளிச்செய்த வார்த்தை. "ஸுக்ரீவம் சரணம்கத:" என்றத்தை நடத்தப்பார்த்தார் மஹாராஜர். "ராகவம் சரணம்கத:" என்றத்தை நடத்தப் பார்த்தார் பெருமாள்.

(4-3-5 கண்ணியெனதுயிர்.)

120. (ஏதுமாடையுமஃதே) திருவரைக்குத் தகுதியான ஆடை யென்னுதல்; புரு ஷோத்தமத்வத்துக்குத் தகுதியான வென்னுதல். ஒருநாள் ஸ்ரீவைஷ்ணவ வண்ணத்தான் திருப்பரிவட்டங்களை அழகியதாக வாட்டிக்கொண்டுவந்து எம்பெருமானாருக்குக்காட்ட, போர த்ருப்தராய் அவனை பெருமாள் திருவடிகளிலே கைப்பிடித்துக்கொண்டுபுக்கு "நாயன் தே இவன் திருவரைக் கேடாம்படிவாட்டினபடி திருக்கண்சாத்தி யருளவேணும்" என்றிவற் றைக் காட்டியருள, கண்டுகந்தருளி உடையவரை அருள்பாடிட்டருளி "இவனுக்காக ராஜகன் சம்திறத்திற்செய்த குற்றம் பொறுத்தோம்" என்று திருவுள்ளமாயருளினர்.

(4-4-8 திருவுடைமன்னரை)

121. (திருவுடை மன்னரைக்காணில்) நாதமுனிகள், ராஜ ஸாமந்தன் தலையிலே அடியையிட்டு ஆனைக்கழுத்திலே புக்கபடியைக்கண்டு, "ஸர்வேச்வரன் ப்ரஹ்மாதிகள் தலை யிலே யடியிட்டு பெரியதிருவடியை மேற்கொள்ளும்படி இதுவாகாதே" என்று மோஹித்தா ரென்று ப்ரஸித்தமிறே; ராஜா ஸபரிகரமாக கங்கைகொண்ட சோழபுரத்தேறப் போகச் செய்தே, பெரியமுதலியார் மன்னனார் திருவடிகளிலே ஸேவித்திருக்கச்செய்தே, பெண் பிள்ளைவந்து, "நம்மகத்திலே ஒருகுரங்கு மிரண்டு வில்லிகளு மொரு பெண்ணுமாக வந்து புகுந்தார்கள்" என்றவாறே, பெருமாளு மிளையபெருமாளும் பிராட்டியும் ஜாத்ரவ்யாகாண பண்டிதனும்" என்று புத்திபண்ணி பின்றொடர்ந்துபோய் முன்னேபோய் "போகிறார்கள், போகிறார்கள்" என்னக்கேட்டுக் கீழைவாசலிலே சென்றவாறே "இப்படி போகிறவர்களைக் கண்டிகோளோ" என்று வாசலிலவர்களைக்கேட்க, அவர்கள் "கண்டிலோம்" என்ன, அதுவே ஹேதுவாகத் திருநாட்டுக்கெழுந்தருளினரிறே.

(4-4-9 விரும்பிப்பகவரை.)

122. ராஜேந்திர சோழனிலே திருவாய்க்குலத்தாழ்வாரென்று ஒருத்தருண்டு, அவர் வர்ஷாவிலே "பயிர்பார்க்க" என்று புறப்பட்டு மேகதர்சனத்திலே மோஹித்துவிழுந் தார்; இவர்விழுந்தத்தைக்கண்டுநின்ற குடிமகனோடிவந்து அவரை யெடுத்துக்கொண்டுவந்து க்ருஹத்திலேவிட்டு, "இவர் ப்ரக்ருதி அறிந்திருந்து மிக்காளிலே இவரை வயல்பார்க்கப் போகப் படவிடுவாருண்டோ" என்றான்.

(4-6. தீர்ப்பாரையாமினி ப்ரவேசம்.)

123. கீழ் *வீற்றிருந்தேழுலகையிருக்க, அனந்தரம் * தீர்ப்பாரையாமினியாயிருக்கிற திறே. எம்பார் கீழில் திருவாய்மொழியையும் இத்திருவாய்மொழியையும் அநுஸந்தித்து, மோருள்ளதனையும் சோறேயோ? அதிலே அப்படி நிரவதிகப்ரீதியாய்ச் சென்றது; இதில் இப்படி மோஹத்தோடே தலைக்கட்டிற்று; இதுக்கு இருந்த அடைவு சொல்லுவேனே? இதுக்கு *அஸங்கதிரேவ ஸங்கதி: என்று அருளிச்செய்வராம்.

(அவ்விடத்திலேயே, ப்ரவேசத்தின் முடிவில்)

124. ராவணன் மாயாசிரஸ்ஸைக் காட்டினபோது பிராட்டியும் அல்லாத ஸ்த்ரீகளோபாதி சோகித்துக் கண்ணநீர்விழவிட்டிருந்தாளாயிருந்தது; இதுக்கு அடி என்? இது கேட்டபோதே முடியவன்றோ ப்ராப்தம் என்று ஜீயரைக்கேட்க; அவதாரத்தில் மெய்ப்பாட்டாலே மெய்யென்றே சோகித்தாள்; ஜ்ஞானமன்றியிலே ஜீவிக்கைக்கு ஹேது அவருடைய ஸத்தையாகையாலே உளளாயிருந்தாள்; இவ்வர்த்தம் மெய்யாகில் ஸத்தையுமில்லையாம் என்றருளிச் செய்தார்.

(4—6—1 தீர்ப்பாரையாமினி.)

125. (தீர்ப்பாரை யாமினி யெங்ஙனம் நாடுதும்) இதுக்கு மூன்றுபடியாக வருளிச்செய்தருளுவர். [ஈடு ஸேவிக்க.]

126. (அவ்விடத்திலேயே) [ஓர்ப்பால்] இவன்தானொரு கூரத்தாழ்வானோடொக்கும் காணும்.

(4-6-2 நிசைக்கின்றதே யிவள்நோய்)

127. (இசைப்பின்றியித்யாதி.)..........இங்கே அருளிச்செய்யும் வார்த்தை;—பின்னையுறங்காவில்லிதாஸர் குடிமகனொருவனுக்கு ஐயனார் ஏறி வலித்து கலிந்தவாறே உனக்கு

---

## பிழை திருத்தம்.

கீழே 23, 24 ஆம் பக்கங்களில் அச்சுக்கூடத்தவறுகச் சில பிறழ்வுகள் நேர்ந்துவிட்டன. அவற்றின் திருத்தம் இங்குத் தெரிவிக்கப்படுகிறது.

பக்கம் 23ல், 114 லக்கமுள்ள ஐதிஹ்யம் 115 ஆக எண்ணத்தக்கது. பக்கம் 24ல், 120 லக்கமுள்ள ஐதிஹ்யம் 114 ஆக எண்ணத்தக்கது.

அன்றியும் ஓர் ஐதிஹ்யம் விடுபட்டது; அதாவது—

(4—3—11.) உய்வுபாயம். [வையம்மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே] என்கிறவிடத்தே நெடுங்காலம் பூமியிலே ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீயோடே * நாட்டாரோடியல்வொழிந்து* என்கிறபடியே தங்கள் வ்யாவ்ருத்திதோற்ற இருக்கப்பெறுவர்கள் என்று ஜீயர் உருத்தோறு மருளிச்செய்வர். பால்யத்திலே பட்டரைப் பறிகொடுத்தாரிறே அவர்.

(4-5-8 நமக்கும் பூவின்மிசை)

(சொன்மாலைகள்.) ஸர்வேச்வரன் 'ஆழ்வீர்! நம்மையொரு கவி சொல்லும்' என்றால் அப்போதே கவி சொல்லச் சமையும் படியாகவல்ல வெனக்கென்கிறார்—என்று முன்புள்ள முதலிகள் நிர்வஹிக்கும்படி. அங்ஙனன்றிக்கே பட்டர், *என்னாகியே தப்புதலின்றித் தனைக்கவி தான் சொல்லி* என்கிறபடியே ஸர்வேச்வரன் கவிபாடினகையாலே கவிபாடத் தட்டில்லை; அவன் அங்கீகரித்துத் திருக்கண்களால் குளிரக் கடாக்ஷித்து நீரொரு கவி சொல்லுமென்றால் ப்ரீதியாலே உடைகுலைப்படாதே தரித்து நின்று சொல்லவல்லேனான வெனக்கு என்றருளிச் செய்வர்.

வேண்டுவதென்னென்று கேட்க; எனக்குப் பாலும் பழமுமாக வுண்ணவேணும். சாந்தும் புழுகும் பூசவேணும்; நல்லபுடவையுடுக்கவேணும்; நல்ல ஆபரணம் பூணவேணும், தண்டேற வேணும், அனுக்கவிடவேணும்—என்ன; அவர்களும் அப்படியே செய்கிறோம் என்று, பின்னை திருமாளிகையிலே வந்து சாந்து புழுகு ஆபரணாதிகளை வாங்கிக்கொண்டுபோய் அவற்றை அலங்கரித்து சாத்தியும் பண்ணிவிட்டுவந்த அவ்விரா பண்டையிலும் இரட்டியாக அவனை வலிக்க, இதுவென்? என்று கேட்க; பின்னை சாத்துகிறவற்றை யெல்லாம் கொண்டு வந்திகோள்; இவர்க்குச் சாத்துகிற அனுக்கனையிட்டிகோள்; நான் அதின்கீழே போவேனோ? என்னை வெயிலிலே கொண்டுபோனிகோள்; என்னுடம்பிலே நெருப்பை வழியட்டினாற் போலே அவர் சாத்துகிறவற்றைப் பூசினிகோள்; அரிகண்டமிட்டாற்போலே அவர் சாத்துகிற ஆபரணத்தைப்பூட்டினிகோள்; நீங்கள் செய்த செயலுக்கு இவனைக் கொண்டல்லது போகேன் என்று வலித்ததாம்.

128. (அவ்விடத்திலேயே) [சந்தசக்ராமேன்றிவள்கேட்க] ஆய்ச்சிமகளுடைய அந்திமையதசையிலே பட்டர் அறியவென்று எழுந்தருளியிருந்தாராய், தம்மையறியாதே கலங்கிக் கிடக்கிறபடியைக் கண்டு, பெருமாளுக்கு இவள் ஸ்நேஹித்திருக்கும்படியை யறிந்திருக்கையாலே மெள்ளச் செவியிலே ஊதினாற்போலே 'அழகிய மணவாளப் பெருமாளே சரணம்' என்றாராம்; அனந்தரம் அதிலே உணர்த்தியுண்டாய் முடியும்போதெல்லாம் 'அழகிய மணவாளப் பெருமாளே சரணம்' என்று இருந்தாளாக அருளிச்செய்தாராம்.

(4-6-3 இதுகாண்மினன்னைமீர்.)

129. .........[மிக்கசீர் இத்யாதி] அநந்யப்ரயோஜநரான ஸ்ரீவைஷ்ணவர்களிட்ட திருத்துழாயில் பரிமளத்தை வண்டு கொண்டுவந்து ஊதுமாகில். இப்படி ஜீயர் அருளிச் செய்தவாறே 'தளவின்வாசமே' என்னவமையாதோ? *மிக்கசீர்த்தொண்டரிட்ட என்கிற இவ்விசேஷத்துக்குக் கருத்தென்? என்று நான்கேட்டேன்; இவள்தான் நோவுபடுகிறது அத்தலைக்குப் பரிகரில்லையென்றாயிற்று; அங்கே அநந்ய ப்ரயோஜநர் பரிமாறுகின்றார்கள் என்றவாறே உறங்காத கண்ணும் உறங்கும்; பழைய நிறமும் வருங்காண் என்றருளிச் செய்தார்.

(4—6—6. உணியும் பொழுதில்லை.)

130. (மாயன் தமரடி நீறுகொண்டு.) வண்டரும் சொண்டரும் என்கிறவர்களுக்கு அரையன் சொன்ன வார்த்தைக்குப் பிள்ளையுறங்காவில்லிதாஸர் பரிஹாரம் பண்ணின படியை நினைப்பது. அதாவது, அகளங்கநாட்டாழ்வான் இவர்களுக்கு அமணன் பாழியில் விக்ரஹத்தைக் காட்டி 'திருமூர்த்தி. திருவடி தொழுங்கோள்' என்ன; அவர்களும் மெய்யென்று திருவடி தொழுது, அது அமணன் பாழியென்றறிந்தவாறே மோஹித்து விழ, பிள்ளையுறங்காவில்லிதாஸர் தம் ஸ்ரீபாத தூளியை அவர்களுக்கு இட, உணர்ந்து எழுந்திருந்தார்கள். திருக்கொட்டாரத்தினருகே கைக்கிளை கட்டிக்கொண்டிருக்கிற நாளிலே ஜீயர் இத்திருவாய்மொழியருளிச்செய்கிறாராய் இவ்வளவிலே வந்தவாறே, தேர்ப்பாகனார்க்கு* என்று நோவுக்கு நிதாநம் சொன்னாளாகில் அவனையிட்டுப் பரிஹரியாதே *மாயன் தமரடி நீறு கொண்டு அணிய முயலின்* என்று இத்தைப் பரிஹாரமாகச் சொல்லுவானென்? நோவுக்கு நிதாநமொன்றும் பரிஹாரமொன்றுமாயோ இருப்பது? என்று நான் கேட்டேன்; மோர்க்குழம்பு இழியாதே மோஹித்துக்கிடந்த ஸமயத்தில் சுக்கிட்டு ஊதிப் பின்பு மோர்க்குழம்பு கொடுத்துப் பரிஹரிப்பாரைப் போலே *தேர்ப்பாகனார்க்கு* என்றபோதே அவனைக்கொடுவந்து காட்டப் பெருமையாலே முற்பட இவ்வழியாலே

ஆச்ரயிப்பித்தப் பின்பே [illegible] காட்டுவதாகக் கடவர்—என்றருளிச் செய்தார்.

(4—6—7. அணங்குக்கருமருந்தென்று.)

131. (உணங்கல்கெட.) ..........அன்றிக்கே, ஜீயன் திருக்குருகைப் பெருமாளரையர் நிர்வஹிக்கும்படி —“ உணங்கல் கெட — இவளுடைய உலங்குதல் கெட ; இவளிளைப்புத்தீர. கழுதென்று பேய் ; கழுதை — பேயை ; உதடாட்டம் கண்டு என்பயன்— நீங்கள் ஆடுகள்ளும் பாரிதக் கொடுக்க, அத்தை அது விநியோகங்கொள்ளும்போது அதனுடைய உதடாடுகிறத்தைக் கண்டிருக்கிறத்தால் என்ன ப்ரயோஜனமுண்டு ! என்று. * கழுது பேயர் பாணும் * என்றுளிறே.

(4—6—11. தொழுதாடித்தூமணி.)

132. [தொழுதாடித் தூமணி வண்ணனுக்காட் செய்து நோய்தீர்ந்த] என்றதுக்கு அம்மங்கியம்மாள் பணிக்கும்படி—[illegible] குழம்பு குடித்தாள், தரித்தாள், [illegible] சொன்னாள் என்பர்களிறே ; அதுபோலே காணும் என்று.

(4—7—5. [illegible] யானே.)

133. [எனையேன் [illegible] [illegible] ச்லோகத்தைக் கேட்டு [illegible] யில்லை ; ஆழ்வான் ! உன்முகத்தைக் காட்டிக் காணாய் ’ என்று பார்த்தருளினார்.

(4—7—8. கண்டு கொண்டேன் கைகளார.)

134. [நின் திருப்பாதங்கள் மேல்]..........* த்வத்பாதபங்கஜபரிக்ரஹதக்பரஜங்கமூபாலாஹ்—த்வத்பாத பங்கஜ பரிக்ரஹதக்பரஜங்க பூயாஸர் * என்கிறதுக்கு ஆழ்வார் —“ வார்த்தையழகிது, வருத்த விஷயத்திலேயாகப் பெற்றிலோம் ” என்றருளிச் செய்தார். (த்வத்பாதேத்யாதி ச்லோகம் பவபூதிகவியின் மாலதீ மாதவீயத்திலுள்ளது.)

(4—8—2. மணிமாமை குறைவில்லா.)

135. [அணிமானத்தடவரைத்தோள் .........ஆபரணத்துக்கு ஆபரணமான தோள் என்று ஜீயர் அருளிச் செய்வர். அணியென்று அழகாய், மானமென்று பெருமையாய், அணிபெருகியதோள் என்று ஒரு தமிழன்.

136. (அவ்விடத்திலேயே. [பணியாவமரர் [illegible] பணி கொண்ட]..........இங்கே அருளிச் செய்யும் வார்த்தை ; எழுந்தருளியிருக்கிறவிடத்திலே ஸ்ரீவைஷ்ணவர்கள் அமுது செய்யாநிற்க, ஆச்சான் தளிகையமுது பரிமாறுகிறவர் அருகே சாய நின்று பரிமாறினார் ; அத்தை உடையவர் கண்டு [illegible] முகத்திலே நோக்கி, நேரே நின்றன்றோ பரிமாறுவது ’ என்றார் ; அவ்வளவில், ஆச்சான் “ பணியாவமரர் பணிவும் பண்பும் தாமேயாய் அடியேனைப் பணிகொண்ட ” என்று பணித்தான்.

(4-8-8. வரிவளையால் குறைவில்லா.)

137.......[பூங்கோள் இத்யாதி.] ஸ்ரீ ஜநகராஜன் திருமகளுக்கும் ருக்மிணிப் பிராட்டிக்கு முண்டான விடாய் தனக்கொருத்திக்கு முண்டாகையாலே, அவர்களிருவரும் பெற்ற பேற்றை நானொருத்தியும் ஒருகாலே பெறவேணு மென்கிறாள். “இது பட்டர் அருளிச் செய்ய நான் கேட்டேன்” என்று பிள்ளையருளிச் செய்வர். (மேலும் ஈடு ஸேவிக்க.)

(4-9. கண்ணுதார்—ப்ரவேசம்.)

138........எம்பார் "உன்னைப் பிரிந்திருந்து படுகிற க்லேசத்தினளவல்ல உன்னை யொழியப் புறம்பே பேறுபிழவுயாயிருக்கிற ஸம்ஸாரிகள் நடுவே யிருக்கிற இருப்பால் படுகிற க்லேசம்; இத்தைத் தவிர்த்தருளவேணு மென்கிறார் என்றருளிச் செய்வர்.

139. (அவ்விடத்திலேயே).......ஆழ்வான் அங்ஙனன்றிக்கே......(ஈடு ஸேவிக்க.)—அவ்விடத்திலேயே—ஆழ்வான்தான் ஓரிடத்தே வழிபோகாநிற்க, ஒரு ஸர்ப்பம் தவளையைப் பிடித்துக் கூப்பிடாநிற்க, 'இது ஆர் அறியக் கூப்பிடுகிறது!' என்று மோஹித்தானும். இவ் வாழ்வான் ப்ரக்ருதிக்குச் சேருமே இவர் நிர்வாஹமும்.

(4-9-2. சாமாறுங் கெடுமாறும்.)

140. [கெடுமாறும்] ஒருத்தனை ராஜத்ரோஹியென்று கையையும் காலையும் தறிக்க, இவனை வினவப் புகுந்தவர்கள் 'இப்படிப் பட்டதாகாதே' என்ன, "ஆயிரம் ஊக்நூறென்று சில காசு தா என்னுதே இவ்வளவோடே போயிற்று உங்களநுக்ரஹமிறே" என்றானாம்.

141. (அவ்விடத்திலேயே) [எமாறிக் கிடந்தலற்றும்].......பிள்ளையமுதனார் பணிப்பர் [ஈடு ஸேவிக்க.]

(4—9—3. கொண்டாட்டும் குலம்புனைவும்.)

142. சிற்றாள் கொண்டார் "இவர்க்காகில் இது சேர்க்கைப்பல்லிபோலே பணி யன்றோ என்றிருக்கவேண்டுவது" என்றாராம்.

(4—9—8. காட்டி நீ கரந்துமிழும்.)

143. [கூட்டரிய திருவடிக்கள் எஞ்ஞான்று கூட்டுதியே.]..........பிள்ளை திருநறை யூரரையர் 'ஒரு குருவி பிணைத்த பிணை ஒருவராலவிழ்க்கவொண்கிறதில்லை; ஒரு ஸர்வசக்தி கர்மாநுகூலமாகப் பிணைத்த பிணையை அவனைக் காற்கட்டாதே இவ்வெலியெலும்பனான ஸம்ஸாரியால் அவிழ்த்துக்கொள்ளப்போமோ?' என்று பணிப்பர்.

(4—10. ஒன்றுந்தேவும்—ப்ரவேசம்.)

144. எம்பார் ஸகல வேதசாஸ்த்ரங்களையும் அதிகரித்துவைத்து பரதத்வமின்ன தென்று அறுதியிடமாட்டாதே சேப்புக்குக் கூரைச் சிற்றறிவாளுண்டோவென்று கண்ட விடமெங்கும் புக்குத் தலை சாய்த்துத் தடுமாறித் திரியாநிற்க, எம்பெருமானார் தர்சநஸ்தரில் எத்தனையேனும் கல்வியில்லாத ஸ்த்ரீப்ராயரும் தேவதாந்தரங்களை அடுப்பிடுகல்லோபாதியாக நினைத்திருக்கிறது இவ்வொன்றுந்தேவும் இப்பக்ஷத்திலேயுண்டாகையிறே என்றருளிச் செய்வர்.

(4—10—2. நாடி நீர் வணங்கும்.)

145. அவன் மேவியுறை கோயில்.)...........'பரமபதத்திலும் ஸம்ஸாரிகள் படுகிற க்லேசத்தையநுஸந்தித்துத் திருவுள்ளத்தில் வெறுப்போடேயாயிற்று எழுந்தருளியிருப்பது' என்று பட்டருளிச் செய்ய, ஆச்சானும் பிள்ளையாழ்வானுமித்தைக் கேட்டு "பரமபதத் திலே ஆனந்த நிர்ப்பரனாயிருக்கிற விருப்பிலே திருவுள்ளத்திலே ஒரு வ்யஸநத்தோடே யிருந் தானென்கை உசிதமோ என்றார்கள்" என்று பண்டிதரென்கிறவர் வந்து விண்ணப்பஞ் செய்ய, * வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி து:க்கித: * என்றது குணப்ரகரணத்தி லேயோ? தோஷ ப்ரகரணத்திலேயோ வென்று கேட்கமாட்டிற்றிலீரோ? இது குணமாகில் குறைமென்று பேர்பெற்றவற்றில் அங்கில்லாததொன்றுண்டோவென்று அருளிச்செய்தார்.

சங்கநிதி பத்மநிதி தொடக்கமானவற்றைக் கொடுக்கக் கொடுத்துச் செய்யாதனவில்லை; பின்னையும் முடிவிலே வந்தவாறே இப்படியேயாயிருந்தது; நம்முடைய பகவத் ஸமாச்ரயணத்துக்கும் பலம் அங்ஙனே யாகிறதோவென்று அஞ்சியிருந்தோம்' என்ன, 'அங்ஙனொரு அஞ்சவேண்டா, அவர்கள் 'இவன் என்தோழன், மைத்துனன்' என்று தேஹ ஸம்பந்தத்தைக் கொண்டு விரும்புகையாலே அவர்களுக்கு தேஹாவதியாய்விட்டது; நாம் ஸ்வரூப ஜ்ஞானத்தாலே நித்யனான ஆத்மாவுக்கு வகுத்தபேறு பெறவேணுமென்று பற்றுகையாலே பேறும் யாவதாத்மபாவியாயிருக்கும்' என்றருளிச் செய்தார்.

---

## ஐந்தாம்பத்து.

---

### (5—1—1 கையார் சக்கரத்து)

150. [காப்பாரார்]……*மித்ரபாவேந* என்கிற ச்லோகத்தில், எம்பார், ஸர்வஜ்ஞனுக்கு ஒரு அஜ்ஞானமும் [illegible], ஸர்வசக்திக்கு ஒரு அசக்தியுமுண்டு' என்றருளிச் செய்வர். ஒருவன் தன்னை யாச்ரயித்தால், முன்பு புத்திபூர்வம் பண்ணின குற்றத்திலே [illegible] ப்ராஸங்கிகமாய் வருமவற்றை [illegible] [illegible] யாக்கி, இப்படி இருக்கைக்கு அடி ஸ்வாபாவிகமான [illegible] அடைக்கு.

### (5-1-4. என்கோள்வனுன்னைவிட்டு.)

151. அவதாரிகையில், பட்டர் நிர்வாஹமும் நிர்வாஹாந்தரமும் கண்டு ஸேவித்துணர்க.

### (5—1—7. அம்மானாழிப்பிரான்.)

152. [அவனேவ்விடத்தான் யானார்] பிள்ளைமுதனார் 'அம்மானாழிப்பிரான்' என்று மேலே காட்டி 'யானார்' என்று குறையச்சொல்லிக்காட்டுவர்.

### (5—1—9. ஆவாரார் துணையென்று)

153. ஆளவந்தாரருளிச்செய்ததாகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி; (திருச்சக்கரம் சங்கினொடும் அடியேனொடும்மானன் என்று.) கையிலாழ்வார்களோடு பொருந்தினாற்போலே என்னோடே வந்து கலந்தானென்கிறார் என்று. அத்தை எம்பெருமானார் கேட்டருளி, இங்ஙனேயாக வடுக்கும்—*கூராராழி வெண்சங்கேந்தி வாராய்* என்றுபிற்று இவர் ஆசைப்பட்டிருப்பது; ஆசைப்பட்டபடியே திவ்யாயுதங்களோடே வந்து கலந்தானென்கிறார் என்று அருளிச்செய்தருளும்படி.

### (5—2. பொலிக பொலிக.—ப்ரவேசம்.)

154. இத்திருவாய்மொழியை ஆளவந்தார்பணித்தாராகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி—ஆழ்வாருடைய ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயைக் காண்கைக்காக நித்யஸூரிகள் இங்கே வர, அவர்களைக் கண்டு மங்களாசாஸநம் பண்ணுகிறாரென்று. *கண்ணுதார் முறுவலிப்பிலே ஸம்ஸாரிகள் படுகிற க்லேசத்தை யநுஸந்தித்து அதுக்குப் பரிஹாரமாக *ஒன்றுந்தேவிலே பகவத்பரத்வத்தை உபபாதித்துத்திருத்த, அத்தாலே திருந்தி ஸம்ஸாரபயபத விபாகமற்று அங்குள்ளாரும் இங்கே வரும்படியிருக்கிற சிறப்பைக்கண்டு மங்களாசாஸநம் பண்ணுகிறார் என்று, இங்குள்ளார் பக்கலிலே ப்ராதாந்யம் தோற்ற எம்பெருமானார் அருளிச் செய்யும்படி.

(5—3—6. அன்னையென் செய்யிலென்.)

162. [மணிவண்ணன் வாசுதேவன் வலையுளே.] ஆழ்வார் திருவரங்கப்பெருமா ளரையர் வலையாக அபிநயித்துப்பாடாநிற்க, திருக்கண்களைக் காட்டியருளினார் அப்பெருமாளர். * கமலக்கண்ணென்னும் நெடுங்கயிறு * என்னக் கடவதிறே.

(5—3—7. வலையுளகப்படுத்து.)

163. [நலையில் வணங்கவுமாங்கொலோ தையலார் முன்பே] இத்திருவாய்மொழியை ஆழ்வான் ராஜேந்த்ரசோழனில் ஸந்த்யாவந்தனத்திலே நிர்வஹியாநிற்க, ஆமருவிநிரைமேய்த்தான் நம்பியார் என்று நூறு வயஸ்ஸு போந்திருப்பாரொருவர் நடுங்க நடுங்க எழுந்திருந்து நின்று "ஆழ்வான்! தலைமகள் தலையாலே வணங்கப்பெறுமோ?" என்ன; பெறும், சிஷ்டாசாரமுண்டுகாணும், ஸ்ரீஜநகராஜன் திருமகள் அநுஷ்டித்தாள்காணும் *ஸீதாஹ்வா ஆதிவாத்ய —ஸிரஸா சாபிவாதய.*...............

(5—3—11. இரைக்குங் கருங்கடல்)

164. [இரைக்குங் கருங்கடல் வண்ணன்] அனந்தாழ்வான் பணித்தானாக நஞ்சீயர் வந்து பட்டருக்கு, * அவாப்த ஸமஸ்த காமமாகய * என்றபோது கடல் சீறிமண்கொண்டு மேல்மண்ணெறிந்தாற்போலேயாயிற்று இவள் படார்வல் என்று தாவினைக் கேட்க அவன் தன் ஸர்வாதிகத்வம் கலங்கினபடி என்றருளிச்செய்தார்.

(5—3—6. பின்னின்ற காதல் நோய்.)

165. [இங்கின்ற நீளாவி காப்பாரார்] .........இத்தை முடித்து நம்மை நோக்குவாரார்! என்கிறதென்று இப்படி முறுகச் சொன்னது தன்னை ஒரு தமிழன் இச் சப்தத்துக்குத் தாத்பர்யமாக இட்டு வைக்கிறான்—பிரிவிலும் முடியாத என்னுயிர்ப்பகையை நீக்கி என்னை நோக்குவாரார்? என்று.

(5—3—7. காப்பாராரிவ்விடத்து)

166. [செல்கின்ற கங்குல்வாய்] தமிழாசாரியன் என்று தமிழர்க்கு அகஸ்த்யனோடு பாதியாயிருப்பானொருவன் "செல்கின்ற நாளகத்து" என்று வ்யாக்யானம் பண்ணினவைத்தான்.

(5—5—1. எங்ஙனேயோ வன்னைமீர்காள்.)

167. கூரத்தாழ்வார் ஒருநாளிலே நங்கையார் திருவடிச்சார்ந்தவாறே இவ்வாழ்வாருக்கு விவாஹம் பண்ணுவோமோவென்று விசாரித்து இதுதான் க்ரமத்தாலே வந்த ஆழ்வானுக்கு விரோதமாய்த் தலைக்கட்டும்; இனித்தான் * அநாச்ரமீ ந ஸந்திஷ்டேத் * என்று சாஸ்த்ரம் சொல்லாநின்றது; இச்சாஸ்த்ரார்த்தத்தை அநுஷ்டிப்போமோ? பாகவதபர்யந்தம் பண்ணுவோமோ? என்று விமர்சியா, அந்த ஸாமாந்ய தர்மத்திற்காட்டில் இந்த விசேஷ தர்மமே ப்ரபலம் என்று தவிர்ந்தார்.

(5—5—7. நிறைந்தவன்பழி.)

168. [நிறைந்தநித்யாதி.] ஆண்டாள் ஒருநாள் பட்டரையும் சீராமப்பிள்ளையையும் காட்டி 'இவர்கள் விவாஹப்ராப்தரானார்கள், பேசாதே இருக்கிறதென்?' என்ன, 'ஆகில் நாளைப் பெருமாள்பாடே போனவாறே வாக்காட்டு' என்ன, அவர்களையும் கொண்டு திருமுன்பே நிற்கச்செய்தே பெருமாள் அருளப்பாடிட்டு 'ஒன்று சொல்லுவாய் போலேயிருந்தாயீ!' என்று திருவுள்ளமாக, 'இவர்கள் விவாஹ ப்ராப்தரானார்களென்று சொல்லாநின்றார்கள்' என்ன, நாமே ஸத்ருசமான இடத்தில் ஸம்பந்தித்துத் தருகிறோம் என்றருளிச்செய்து,

பிற்றைநாள் மன்னியைக்கொண்டு வந்து நீர்வார்த்தார்கள். ஆக, அத்தலையாலே வரும தொழிய தாந்தாம் ஒன்றை ஆசைப்படுகையுங்கூட பழியென்றிருக்கும் குடிகாணும்.

(5—6—7. உற்றார்களெனக்கில்லை.)

169. [உற்றார்களையழிப்பேனும்] அவர்களுக்கு ப்ரயோஜநாந்தரங்களிலே ருசியுண்டானால் அந்த ப்ரயோஜனங்களைக் கொடுத்து என் பக்கலில் நின்றுமகற்றுவேன் நானென்னும். அன்றிக்கே, ஆண்டான் பணித்தானாக இளையபெருமான் 'அவர்களை ஸௌந்தர்யாதிகளாலே அழிப்பேனும் நானென்னுமின்றாள்' என்றருளிச்செய்வர்.

(5—6—9. கோடியவினையாதும்.)

170. [கோடியானிலங்கை செற்றேனேயென்னும்] இவ்விடத்தில் கொடியானென்கிறவிடம் திருத்தாயார் வார்த்தைகாண் என்றருளிச்செய்வர் ஜீயர். எதிரிகளை இவன் ஒன்றாக மதித்திருந்தானாகாமைக்கு; அவனாலே ஆவிஷ்டையிறே இவள்.

(5—6—10. கோலங்கோள் சுவர்க்கமும்.)

171. கோலங்கோள் இத்யாதி.]........நரகத்தோடோத்திருக்கச் செய்கே வாசலிலே கழுஞ்க செம்மண் பூசியிருக்கும் போலேகாண் என்றருளிச்செய்வர்.

(5—7—2. அங்குற்றேனல்லேன்)

172 [உன்னையித்யாதி.]..........உன்னைக் காணவேணுமென்னுமாசையாலே பலஹீனனைத் தளர்ந்து இனி உபாயாநுஷ்டாநக்ஷமனல்லேன்; இது பூர்வர்கள் நிர்வாஹம்..........
(மேலே நடு ஸேவிக்க.)

(5—7—7. வந்தருளியென்னெஞ்சிடம்.)

173. வந்தருளி இத்யாதிக்கு—பட்டர் ஸ்ரீ புஷ்பயாகமணித்தானவாறே நஞ்சீயரைப் பலகாலும் இயல்கேட்டருளுவர்; ஒரு கோடையிலே திருவீதியிலே நீரை விட்டு எழுந்தருளியிருந்து இப்பாட்டை இயல் சொல்லுமென்று ஜீயரையருளிச் செய்து தாம் இத்தையநுஸந்தித்திருந்து அநந்தரத்தே தாமுமிப்பாட்டை இயல்சொல்லி யமநியமாதிக்ரமத்தாலே, யெழுபவல்துளை மாநம் பண்ணிப் புறம்புள்ள பராக்கையறுத்து அநுஸந்திக்கப்புக்காலும் சுக்கான் பால்போலே யிருக்கக்கடவ நெஞ்சுகள் பதஞ்செய்யும்படி தார்மிகராயிருப்பார் இவை சில நாச் சொற்களைப் பொகட்டுப்போவதே, என்றருளிச் செய்தார். நஞ்சீயர் இவ் வார்த்தையை உருத்தோறுமருளிச்செய்வரென்று அருளிச் செய்வர்.

(அவ்விடத்திலேயே, மேலே)

174. ஆப்பான் திருவழுந்தூரரையர் கையிலே தாளத்தை வாங்கி 'வந்தருளி, வந்தருளி' என்று மேல் போகமாட்டாதே படுவராம்.

(5—7—10. ஆறெனக்கு நின்பாதமே.)

175. [ஆறெனக்கு இத்யாதி.]........உபயோபேயங்களிரண்டும் உன் திருவடிகளே யாம்படி பண்ணித்தந்தாயே என்று பிள்ளான் பணிக்கும். இவையிரண்டாலும் உபாயத்தையே சொல்லுகிறதென்று பட்டர் அருளிச் செய்வர். (மேலே நடு ஸேவிக்க.)

(அவ்விடத்திலேயே, மேலே)

176. [நின்பாதமே—சரணாகத் தந்தொழிந்தாய்] என்று நின்பாதமேயென்கிறவிடத்தை இங்கே அந்வயித்த சபதமாக்கி நிர்வஹிப்பர் ஆப்பான் திருவழுந்தூரரையர்.

(5-8-1. ஆராவமுதேயடியேனுடலம்.)

177. [ஆராவமுதே]………உத்தரபூமியிலே லோகஸாரங்க மஹாமுனிகள் வர்த்தியா நிற்க இங்குத்தையானொருவன் அங்கேறச் செல்ல, பிள்ளாய்! தக்ஷிணபூமியில் விசேஷமென்? என்று கேட்க, திருவாய்மொழியென்றொரு ப்ரபந்தமவதரித்து சிஷ்டர்கள் பரிக்ரஹித்து போரக் கொண்டாடிக் கொடு போராநின்றார்கள் என்ன; அதிலே உனக்குப் போவதொரு சந்தைசொல்லிக்காணாய் என்ன; * ஆராவமுதே * என்கிற வித்தனையும் எனக்குப்போம் என்ன; நாராயணாதி நாமங்கள்கிடக்க, இங்ஙனேயுமொரு நிர்தேசமுண்டாவதே! என்று அத்ருப்தராய் இச்சொல்லு நடையாடுகிற தேசத்தேறப் போவோம் என்று அப்போதே புறப்பட்டுப்போந்தார்.

(5-8-4. செலக்காண்கிற்பார்)

178. [ஆகாசத்தைநோக்கி] என்னுடைய நிராலம்பனதையைப் பார்த்து என்று ஆண்டான்வார்த்தை.

(5-8-9. இசைவித்தென்னை.)

179. [செழுமாமணிகள் சேருந்திருக்குடந்தை] ஆராவமுதாழ்வார் திருமழிசைப்பிரான் போல்வார் புருஷரத்நங்கள் சேரும் திருக்குடந்தை என்று நிர்வஹிப்பர்கள்.

(5—9. மானேய்நோக்கு, ப்ரவேசம்)

180. ……இதுதான் நான் அநுபவித்தேனென்று ஜீயர் அருளிச்செய்வர். பட்டர் திருவடிகளை யாச்ரயித்தபின்பு ஒருகால் மேல்நாட்டுக்கெழுந்தருளி மீண்டு பெரியத்வரையோடே திருநாளுக்குதவவேணுமென்று வர, திருக்காப்பன் துறையளவிலே வந்தவாறே அசிந்திதமாக ஆறு பெருகிக்கிடக்க, இராத்திருநாளெழுந்தருளி இங்குண்டான ஸம்ப்ரமங்களெல்லாம் செவிப்படுவது, வந்து புகுரப்பெறுதொழிவதாய்க்கொண்டு போர நோவுபட்டோமென்று அருளிச்செய்வர்.

(5-9-1. மானேய் நோக்குநல்லீர்.)

181. [மானேய் நோக்கு நல்லீர்] நான் திருவல்லவாழிலே போய்ப்புகும்படி உங்கள் கண்ணாலே குளிரநோக்கி ப்ரஸாதிக்க வேணுமென்கிறாளென்று பிள்ளான் பணிக்கும்,

(அவ்விடத்திலேயே, மேலே)

182. ஜநநாத ப்ரஹ்மராயர் திருமுடிக்குறையிலே ஒரு மரம் வெட்டப்புக, அத்தை எம்பார் கேட்டு 'அல்லாளப்பெருமாளே! ஈச்வர விபூதியை அழிக்கப்பார்த்தாயோ! என்ன, இவர் சொல்லும் வார்த்தை கேட்கைக்காக 'ஈச்வரவிபூதியல்லாத இடமுண்டோ?' என்ன, 'அவைபோலன்றுகாண் இவை; ஸர்வபௌமனை ராஜாவும் மஹிஷியுமாக முற்றூட்டாகக் குடநீர்வார்த்து ஆக்குஞ்சோலைபோலே பெருமாளும் பெரியபிராட்டியாருங்கூடக் கை தொட்டு ஆக்குமவைகாண்' என்றருளிச் செய்தார்.

(அவ்விடத்திலேயே. மேலே)

183. நல்லான் பட்டர் ஸ்ரீபாதத்தையாச்ரயித்து நெடுங்காலம் ஸேவித்து பின்பு அந்திமதசையிலே பட்டரெழுந்தருளி 'என் நினைத்திருந்தாய்' என்ன, ஒரு ஸர்வசக்தி உபகரிக்கும் போது இங்ஙனே கணக்கவாகாதே உபகரிக்குமது என்று நினைத்திருந்தேனென்ன; அது வென்? உன்தேசத்தைவிட்டு பந்துக்களைவிட்டு நெடுந்தூரம்போந்து இங்ஙனே நோவுபட்டுத் திருவடிசேரக் கிடந்தாயாகில் இங்கு உபகாரமென்? என்ன, தேசாந்தரத்திலேயிருந்து அப்ரவித்தனாய் விழுந்துபோகக்கடவ வென்னை இவ்வளவும் அழைப்பித்து உம்முடைய திருவடிகளை யாச்ரயிக்கப்பண்ணி ருசியை விளைப்பித்து இத்தேசத்திலே உம்முடைய கண்வட்டத்

திலே சரீர வியோகமுண்டாம்படி பண்ணினனே என்ன; ஆனாலும் தானாக அபிமானித்த சரீரம் போகாநிற்க நீ இங்ஙன்கிளைத்திருந்த தென்கொண்டு? என்ன; ப்ரமாணங்கொண்டு கினைத்திருந்தேன் என்றான்.

(5—9—3. சூடுமலர்க்குழலீர்.)

184. [சூடுமேலர்க்குழலீர்] உங்களைச் சூடுமலர்க்குழலாராக நான் காண்பதென்றோ? என்று பிள்ளான். அதாவது, இவள் பூவுக்கு இரங்க, அவர்கள் பூச்சூடியிரார்களிறே என்றாயிற்று அபிப்ராயம். அங்ஙனன்றிக்கே, அவன்தான்வந்து இவள் பக்கல் பாவபந்த முறைக்கவுறைக்கக் கொண்டாடுவது இவர்களையாகையாலே, பெரிய திருநாள் ஸேவித்தார் இரட்டைகள் அழுக்கானாலும் மடிகுலையாமே வைக்குமாபோலே இவர்களும் அவன் கொடுத்த மாலையில் செவ்வியழிந்ததேயாகிலும் மாறாதேவைத்துக் கொண்டிருப்பர்களிறே.....

(5-9-4- நிச்சலுந்தோழிமீர்காள்.)

185. ......[நிச்சலுந்தோழிமீரித்யாதி.] * மாசறு சோதி தொடங்கி இவ்வளவும் வர ஒரிதஞ்சொல்லுகிற நீங்கள் என்ன ப்ரயோஜநம் பெற்றீர்கோள்? என்று பிள்ளான்.

(அவ்விடத்திலேயே, மேலே)

186. [பச்சிலைநீள்கமுகும் பலவும் தேங்கும் வாழைகளும்]..........பச்சிலைநீள் என்கிறத்தை அவற்றிலேயும் உயர்ந்தபிள்ளை கூட்டும்படி காணும் என்று ஜீயர் அருளிச் செய்வர்.

(5-9-10. தோல்லருள் நல்வினையால்)

187. [நல்வினையால்].......நாநீரற்றிருக்கை பாபபலமிறே; நா நீருண்டாய்த் திருநாமம் சொல்லவல்லோமே என்கிறாள் என்று அம்மங்கியம்மாள் வாக்யார்த்தமாகச் சொல்லும் என்றருளிச் செய்வர்.

(5—10. பிறந்தவாறும் ப்ரவேசம்.)

188. ஆழ்வார்களெல்லாரும் க்ருஷ்ணாவதாரமென்றவாறே போரமண்டியிருப்பர்கள்; இதுக்கு ஹேதுவென்? என்று பட்டரைக் கேட்க, ஒருவனுக்கு துக்கம் சிலநாள்கழிந்தால் பொறுக்கலாய்; அணித்தானால் ஆறியிருக்கப் போகாதிறே; அப்படியே அல்லாத அவதாரங்களைப் போலன்றிக்கே ஸமகாலமாகையாலே ஒரு செவ்வாய்க்கிழமை முற்படப்பெற்றிலோம்; பாவியேன்! பல்லிலேபட்டுத் தெறிப்பதே! என்னுமிழவாலே வயிறெரித்தலேயாயிருக்கும் என்றருளிச்செய்தார். இனித்தான் ராமாவதாரத்தில் தமப்பன் சம்பராந்தகனுக்கு வீரனாயிருப்பானொருவன்; பிள்ளைகள் தாங்கள் ஆண்புலிகள்; குடிதானே என்னியமறுத்திருப்பதொரு குடி; இவையெல்லாம் மிகையாம்படி குணத்தாலே நாட்டையெல்லாம் ஒரு மார்வெழுத்தாக்கிக்கொண்டிருப்பர்கள்; ஆகையால் எதிரிகள் என்கிற சப்தமில்லை; இங்கு அங்ஙனன்றிக்கே தமப்பன் ஒரு ஸாது வ்ருத்தன்; பிறந்தது கம்ஸன் சிறைக்கூடத்திலே; வளர்ந்ததும் அவனகத்தருகே. ஸ்ரீப்ருந்தாவனத்திலே எழும் பூண்டுகளாகப்பட்ட அஸுரமயமாயிருக்கும். ரக்ஷகரானவர்கள் ஓடி தாழ நிற்கில் பாம்பின் வாயிலே விழும்படியாயிற்று இவன்தன்படிகளிருப்பது; அப்படியானால் வயிறெரியாதே செய்வதென் இவர்கள்? அக்காலத்திலே உணர்ந்து நோக்கப்பெற்றிலர்கள். அவ்விழவுக்கு இன்றிருந்து நோவுபடுகிறார்கள்.

(அவ்விடத்திலேயே, மேலே)

189. "இவர் அவனுடைய அவதாரங்களையும் ஜகத்ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்களையும் *தாயர்மகிழவொன்னார் தளரத் தளர் நடை நடந்த *என்கிறபடியே ஆச்ரிதரை வாழ்விக்கவும் அநாச்ரிதரை அழியச் செய்யவும் அடியிட்டு அப்படி வளர்ந்தருளின க்ருஷ்ணாவதாரத்தையும்

அநுஸந்தித்து மிகவும் சிதிலரானவிவர், தரித்து நின்று உன்னையநுஸந்திக்க வல்லேனும்படி பண்ணியருளவேணுமென்று அவனை சரணம் புகுகிறார் என்று ஆழ்வான் பணிக்கும். அன்றியே, விச்லேஷமயத்திலே உன் குணங்கள் புத்திஸ்தமாய்க்கொண்டு மிகவும் நலிய, அத்தாலே நெருக்குண்டு நோவுபடுகை தவிர்ந்து உன் திருவடிகளிலே வந்து சேர்ந்து உன்னைக் கிட்டியநுபவிக்கும்படி பண்ணியருளவேணுமென்று அவனைக்குறித்து அருளிச் செய்கிறுரென்று எம்பாருளிச்செய்யும்படி. அங்ஙனன்றிக்கே ஸர்வேச்வரன் க்ருஷ்ணனாய் வந்து திருவவதாரம் பண்ணித் திருவாய்ப்பாடியிலே வளர்ந்தருளாநின்றான் என்று கேட்டு அங்கே யதாமநோரதம் நமக்குக் கலந்து பரிமாறலாமென்று தெற்குத் திருவாசலாலே சென்றுபுக, இப்போது இங்ஙனே வடக்குத் திருவாசலாலே புறப்பட்டுத் தன்னுடைச் சோதியேற வெழுந்தருளினானென்று கேட்டு விழுந்து கிடந்து கூப்பிடுகிறாரென்று பிள்ளான் பணிக்கும் என்றருளிச் செய்வர்.

(5—10—2. வதுவை வார்த்தையுள்)

190. [அதுவிதுவது இத்யாதி.] இத்தால் சொல்லுகிறது—இப்பாட்டில் மூன்றர்த்தம் சொல்லாநின்றது; அதாவது—அநுகூல ஸம்ச்லேஷரூப ப்ரதிகூல நிரஸநரூப பத்யந்தரக்ஷணமுமாக இவற்றை அதுவிதுவது என்கிறது என்றாம் பிள்ளான்.

(5—10—4. கள்ள வேடத்தை.)

191. ......பண்டு ஒரு ராஜா ருத்ரதத்தமே ...... என்றெழுதி எழுத்திட்டுத் தாருங்கோள் என்ன, அப்படி பலரும் எழுதி எழுத்திட நிரகச்செய்தே ஆருயர் 'வாராய், நீ இவ்வோலையிலேயே நோக்கிவைத்தாயிறே இவனை பாக்யவான் ஸாதிக்கலாவது, நீ நினைக்கிற தேவதைக்குண்டான உச்ச்ராயங்கள் ஸர்வேச்வரனாலே யென்று ப்ரமாணங்கள் சொல்லாநின்றன, ஆனபின்பு இன்று நீ சொல்ல நான் எழுத்திட்டுப்போகிறேன்; நாளை ஒரு விவக்ஷிதன் தோன்றி 'இவன் அஜ்ஞனாயிருந்தானீ!' என்னக் கேட்பதில் இன்று நீ நினைத்தத் வதைச் செய்துகொள்ளமாட்டாயோ? என்றார்.

(அவ்விடத்திலேயே, மேலே)

192. [வெள்ளநீர் இத்யாதி.] இதுக்கு ஆளவந்தாரருளிச் செய்ததாகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி—ப்ரஹ்மருத்ரர்கள் நடுவே நின்றதொரு முகம் உண்டு, அத்தைச் சொல்லுகிறது என்றாயிற்று. அதாவது ருத்ரனையும் தன்னையும் ஸமமாகச் சொல்லலாம்படி த்ரிமூர்த்தி ஸாம்யத்தைச் சொல்லுகிறதென்று; இதனை எம்பெருமானார் கேட்டருளி "அழகிது, ஆகிலும் அத்தனை தூரம் தேடிப்போகவேணுமோ? இவன் தன் விஷயத்திலே முன்பு பண்ணின உபகாரத்துக்கு ஓரளவுண்டோ? இத்தானே அமையாதோவென்று அருளிச்செய்தார்.

(5—10—6. நின்றவாறு மிருந்தவாறும்,)

193. [நின்றவித்யாதி.]........வடக்குநின்றும் போரப்பாட வல்லராயிருப்பாரொருத்தர் பெருமானைத் திருவடித்தொழவேணுமென்று வர, ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் நீர்த்தத்தினன்றிராத் திருமாலையைப் பாடிச்சமைந்து பெருமானை மத்தகஜங்களை யேத்துமா போலே யேத்தி வசமாக்கிக் கணிசக்கொண்டு 'நாயன்தே! தேவர் திருவடிகளுக்குப்போர நல்லனொருத்தன் எழுநூற்றுக்காதமாறுண்டு சேவைராத திருவடித் தொழவேணுமென்று வருகிறது; இவனையழைத்துக்கொண்டு ஸம்பாவனை பண்ணியருளவேணும் என்ன; பெருமாளும் அப்படியே செய்கிறோம் என்ற திருவுள்ளமாய் அருளப்பாடிட்டு, திருப்புன்னைக் கீழ் நின்றும் அவர் நின்றவிடத்தளவுஞ் செல்ல, நாலுகோல்தரை திருக்கைத்தலத்திலே யெழுந்தருளி விண்ணப்பஞ் செய்வார்களை யெல்லாம் அருளப்பாடிட்டு, வாரீகோள்! இவன்

வந்த நாரத்துக்கெல்லாம் போருமோ நாம் இவனுக்குச் செய்த நரம் என்று திருவுள்ளமானார். இப்படியேயிறே நம்பிழவுகளும் திருவுள்ளத்திலே பட்டு அவையெல்லாம் ஆறும்படிக்கீடாக முகம் தந்தருளவல்லபடியும்.

194. ஒருநாள் ஸ்ரீவைஷ்ணவவண்ணத்தான் திருப்பரிவட்டங்களை அழகிதாக வாட்டி எம்பெருமானார்க்குக் கொண்டுவந்து காட்ட, போரத்ருப்தராய் இவனையுங்கூடக் கொண்டு பெருமாள்பாடேபுக்கு 'நாயன்தே, இவன் திருவரைக்கீடாம்படி இவற்றைத் தொட்டபடி பார்த்தருளவேணும்' என்று காட்ட, கண்டு போரவுகந்தருளி எம்பெருமானாரை யருள்பாடிட்டு 'இவனுக்காகக் கல்லாலுடைய ஈரங்கொள்லி நம் திறத்திற்பண்ணின குற்றம் பொறுத்தோம்' என்று திருவுள்ளமானார்..............

195. "நின்றவாறுமிருந்தவாறும் கிடந்தவாறும்" என்று ஆழ்வார் பாடாநிற்க, "இவையெல்லாம் தொட்டிலிலே" என்றருளிச் செய்தாரெம்பெருமானார். தொட்டிற் பழுவைப்பிடித்துக்கொண்டு நிற்கும்படியும், தரித்து நிற்கமாட்டாமை விழுந்திருக்கும்படி அதுதான் பொறுக்கமாட்டாமை சாய்ந்துகிடக்கும்படியுஞ் சொல்லுகிறது...........

ஆழ்வார் திருவடிகளே சரணம். நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

# ஆறும்பத்து.

## (6-1-வைகல் ப்ரவேசம்)

196. உருத்தோறும் 'இத திருவாய்மொழியருளிச்செய்யப்புக்கவாறே ஜீயர் அருளிச்செய்யும் வார்த்தை—பாண்டவர்கள் கார்யத்துக்காகத் தன்னையோக்கி அவர்கள் கழுத்தைக் கட்டிக்கொண்டு கூடத் திரியச் செய்தேயும் அவர்கள் பட்ட வ்யஸநமெல்லாம் படுகிறார் கண்ணமிவரும்; அவர்கள்தான் ஒரு தர்மபாஸமுண்டு என்றிருக்கையாலே வ்யஸநப்படுகிறார்கள்; இவர்க்கு அதுவுமின்றிக்கேயிருக்க என்செய்யப்படுகிறார்' என்று அருளிச் செய்வர்.

## (6-1-1 வைகல்பூங்கழிவாய்)

197. (வஸ்துமேயுமித்யாதி) பண்டை முதலிகள் பத்தாம் பாட்டிலே ப்ராணயரோஷம் தோற்றச் சொல்லுகிறான் என்று நிர்வஹிப்பர்கள்; பாட்டுத்தோறும் கிலாக்தோற்றச் சொல்லுகிறான் என்று பட்டரருளிச்செய்யும்படி.

## (6-1-2 காதல்மென்பெடையோடு)

198. (பாதம் கைதொழுது) உண்ணுகிற்க மிடற்றைப்பிடித்தாற்போலே விருப்பதோன்றிறே தொழுதவைத்து விழாதே யொழியுமது என்று பூர்வர்கள் நிர்வஹிக்கும்படி; ப்ரித்தாளொரு ஸ்ரீவைஷ்ணவன் ஸ்ரீபாதத்தே தலைபடத் தெண்டனிட்டவன்று எனக்கு உண்டுபட்டகெட்டாப்போலேயிருக்கும் என்றருளிச்செய்வர் ஜீயர். அன்றிக்கே கிலாந்தோற்றும்படி அவர் திருவடிகளிலே கைசென்று தாக்கும்படி விழுந்து கிடவுங்கோள், தீர்க்க ப்ரணாமம் பண்ணுங்கோளென்றபடி.

## (6-1-6 போற்றியாளிருந்தேன்)

199. (புன்னைமேல்) பிள்ளையமுதனார் திருவிருந்தவரைமார்பனை இப்பதத்துக்கு பட்டருளிச் செய்ததென்? என்றுகேட்க, தன்னார்த்தி அவற்றின் செவியிலே படும்படி

உயரச் சொல்லுகிறான் என்றருளிச்செய்தார் என்ன; நெய்தல் நிலத்தில் புன்னை படாந்தன்றோ கிடப்பது; இங்ஙனே சொல்லக்கூடுமோ என்ன; அவன் பட்டர்பாடே வந்து இங்ஙனே பணித்தார் என்ன; இவ்வர்த்தத்துக்கு நிர்ணாயகம் இசையாயிற்று; அது போற்றியென்று உயர்ச்சொல்லியிருக்குமோ தாழச்சொல்லியிருக்குமோ என்றருளிச்செய்தார்.

(6-1-10 வேறுகொண்டும்மை அவதாரிகை)

200. சில வண்டுகளைக்குறித்து—அவர் இத்தலையில் ஸத்தையுமில்லையென்றிருப்பர்; அவனுமுளனென்று சொல்லுங்கோளென்கிறான் என்று ஆளவந்தாரருளிச்செய்வர்; இத்தலையில்லையாகில் அத்தலையுண்டாகக் கூடாது, பெண்பிறந்தார் காரியமெல்லாம் செய்தோம் என்று க்ருதக்ருத்யராயிருக்கிறவர்க்கு ரக்ஷ்யவர்க்கத்திலே நானுமொருத்தியுண்டென்று சொல்லுங்கோளென்கிறான் என்று எம்பெருமானார் அருளிச்செய்வர்.

(பாசுர வியாக்கியானம்)

201. (என்னையுமுளளென்மின்களே) இன்னமுமொருத்தியிருக்கிறாளுண்டென்று சொல்லுங்கோள். ஆளவந்தாரருளிச்செய்ததாகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி = இத்தலையைப் பிரிந்தாரில் இருப்பாரில்லை என்றிருக்கையாலே வாராதொழிகிறதனை; இத்தலையில் ஸத்தையுள்ளமையை யறிவியுங்கோள் என்று; இத்தை எம்பெருமானார் கேட்டருளி; அழகிது; ஆகிலும் இன்றியமையாமை என்று சப்த ஸ்வாரஸ்யமன்று; அதாவது—ஒருதலையுண்டானால் ஒருதலையின்றிக்கேயிராது; இரண்டுதலையுமுண்டானால், இரண்டுதலையுமின்றிக்கேயொழிதலித்தனையாயிற்று; அதில் தாமுளராகையாலே இத்தலையுமுண்டென்கை சித்தம்; ஆனபின்பு ப்ரதிகூலித்தாரைக் கிழங்கெடுத்துப்போகட்டு அநுகூலித்தார் தலையிலே முடியைவைத்து க்ருதக்ருத்யராய் இனிக் கர்த்தவ்ய சேஷமில்லையென்றிருக்கிறவர்க்கு இன்னமும் ரக்ஷ்யவர்க்கமொன்றுண்டென்று சொல்லுங்கோள் என்று.

(6-2 மின்னிடை மடவார் ப்ரவேசம்)

202. இவ் இத்திருவாய்மொழிதன்னை பூர்வாசார்யர்கள் பகவத் விஷயத்தில்லா பத்க்யம்தோற்ற வார்த்தை சொல்லுகை சேஷத்வலக்ஷணமன்று; ஊடலாகிற்படியாலே அயோக்யதாநுஸந்தானம் பண்ணுகிறார் என்று நிர்வஹிப்பர்கள்; இத்தை பட்டர்கேட்டு என்சொன்னார்கள்! இவர்க்கு பகவத் விஷயத்திலுண்டான ருசிக்கு ப்ரகாசகம் இத்திருவாய்மொழியாயிருக்கும்; இதுக்கு வேறேயொரு வழியிடுவதே! ஆனபின்பு இதுவே பொருளாமித்தனை என்றருளிச்செய்தார்.

(6-2-1 மின்னிடை மடவார்கள்)

203. (மாமகா: பாண்டவாச் சைவ) என்கிறவிடத்துக்குச் சிறியாத்தான் சொல்லும்படி; என்னுடையவர்களென்றும் பாண்டவர்களென்றும் பிரிகதான்; அதுவிறே விநாச பர்யந்தமாக்கி விட்டது என்று.

(நம்பீ) கண்டகாட்சி புல்லெழுந்து போனபடியிறே இவன் இங்ஙன் சொல்லுகிறது என்று பெரிய முதலியார் வார்த்தை.

(6-2-2 போகுநம்பீ அவதாரிகை)

204. * இன்னமென்கையகத்தீங்கொருநாள் வருதியேலென்சினவ தீர்வன்னானே* என்று இத்தை உய்ந்த பிள்ளை பாடாநிற்கச்செய்தே—காலாலே உதைப்பது கையாலே தள்ளுவதாய் அபிநயித்துக்காட்டினார். இத்தை எம்பார்கேட்டருளி அங்ஙனன்று; அது பின்னை

பெற்றாளாகில் அவன் நெடுநாள் ப்ரார்த்தித்துக் கிடந்ததன்றோ; ஆனபின்பு அகன்று போரும் என்று, முகத்தைத்திரியவைத்துக்காட்டினார்; நீயகலமின்று பல்லாயிரவெல்லாம் என் ஸந்நிதியிலே உன்னைப்பண்ணுவேன் என்கிறாள் என்று அருளிச்செய்தார். எம்பார்தாம் பாஹ்ய விஷயங்களில் ருசியில்லாமையாலே பதார்த்தஜ்ஞானமின்றிக்கேயிருப்பர்; இப்படியிருக்கையாலே ஸ்த்ரீகளுக்கு அஸாதாரணமான சிஹ்நங்கள் எங்ஙனே இருக்கும்படி என்று சிங்கப்பிரானைக்கேட்டருளினார் என்று ப்ரஸித்தமாயிருக்கும். இப்படியிருக்கிறவர்தாம் மின்னிடை மடவார் அருளிச்செய்யப்புக்கால் இந்த ஸம்ஸாரி பிரட்டுப்பாடத்தொடங்கினார் என்பராம் பிள்ளையுறங்காவில்லிதாஸர். இவருடைய பகவத் விஷயத்தில் அவகாஹநமிருக்கும்படி. எம்பார், ஈச்வரன் முன்னே வந்து நின்றாலும் வா என்பாரையும் கிடையாத ஸம்ஸாரத்திலே அவன் அல்பம் தாழ்த்தானென்ன, போ என்பாரைப் பெறுவதே! என்பர்.

(6-2-6 குழகியேங்கள்)

205. (குழகமேநாள் நம்பி) இவ்விடத்தே பட்டருளிச்செய்வதொரு வார்த்தையுண்டு—ஸமஸ்த கல்யாண குணாத்மகனாய் உபய விபூதியுக்தனாய் ஸர்வாதிகனாய் ஸர்வநியந்தாவாயிருக்கிற ஸர்வேச்வரன் நாலிடைப் பெண்களிருந்ததிடத்தே புக்கல்லது நிற்க மாட்டாத செல்லாமை விளைய, அவர்கள் நீயிங்குப் புகுராதே போ என்ன, விலங்கிட்டாப்போலே போவும் நிற்கவும் மாட்டாதே [illegible] தன்னையுமிவர்களையுமொழிய ஆராய்ந்து [illegible] வைத்துப் போனார்களோ என்றருளிச்செய்வர்.

(6-2-7 கன்மமன்று எங்கள் கையில்)

206. (எம்மை நீ விளையாடுதி) இவன் சொன்ன மர்மம் ஏதோ என்று எம்பாரைச் சிலர் கேட்க, மயர்வற மதிநலம் அருளப்பெற்றவர் பாசுரமிடமாட்டாமல் வன்மம் என்று நின்றார்; என்னைப் பாசுரமிடச்சொல்லுகிறீர்களோ என்றருளிச்செய்தார்.

(6-2 பிணக்கியாவையும் அவதாரிகை)

207. இப்பாட்டை ஜீயருளிச்செய்யா நிற்கச்செய்தே ஆப்பானிருந்தவர் இடைகளிவனைக்கடந்து போனார்களாகில் செய்வதென்! என்று கேட்க, அது ஆச்சர்யம்? பின்னை இரண்டத்தொன்று ஸித்திக்கும் என்றன்றோ அவன்தான் கிடந்தது என்றருளிச் செய்தார்.

(6-3 நல்குரவும் ப்ரவேசம்)

208. "இப்படி தாழநின்றவன் ஸர்வேச்வரன் என்கிறார்" என்று பிள்ளான் பணிக்கும் என்றருளிச்செய்வர்; அதாகிறது (யாவையும் யாவரும் [illegible] பிணக்கி) என்று மேலே ப்ரஸ்துதமான ஸர்வேச்வரத்வத்தை அருளிச்செய்கிறார் என்று. இதிலே திருவாசிதோற்ற பட்டருளிச்செய்வர் என்று ஜீயருளிச்செய்வர்; அதாவது, சேரா மன்ற அபிஸந்தியைக்குலைத்துத் தம்மைச் சேர்விட்டுக்கொண்ட ஆச்சர்யத்தைக்கண்டு விஸ்மிதராகிறாரென்று.

(6-3-2 கண்டவின்பம் துன்பம்)

209. (கண்டுகொள்தற்கரிய) நல்லாரும் நம்பி ஸ்ரீ ஸேநாபதிதாஸரும் கூடத் திருமலைக்குப்போகா நிற்க, ஸ்ரீ ஸேநாபதிதாஸர் தண்டையிட்டுத் தூற்றையடிக்க, நல்லார் அர்த்தகாம நிமித்தமான த்வேஷம் இத்தோடின்றிக்கே யிருக்க நிர்ப்பேக்ஷனாக ஈச்வர விபூதியை நலிவதே! என்ற வார்த்தையை நினைப்பது.

(6-3-9 என்னப்பனெனக்காய்)

210. (தன்னொப்பாரில்லப்பன்) இதுக்கு ஜீயரருளிச்செய்யும்படி— மின்னிடைமடவாரிலே அவன் வந்து மேல்விழ நீ எனக்கு வேண்டா என்று நான் தள்ளத்தள்ள, நீ உனக்கு ஹிதமறிந்தாயோ? நான் உனக்கு வேணுங்காண் என்று தன்னை எனக்குத் தந்தவன் என்று.

(6-4-4 நோவ ஆய்ச்சி)

211. (நோவஆய்ச்சி உரலோடார்க்க இரங்கிற்று) ஜீயர் இப்பாட்டை இயலருளிச்செய்யப்புக்கால் நோவ என்றருளிச்செய்யுமழகுகாணும்; நோவவென்கிறார்காணும் ஆழ்வார் தம் திருமேனியிலே கயிறு உறுத்தினப்போலே.

(6-4-5 வேண்டித்தேவரிரக்க)

212. (பிறந்ததும் வீங்கிருள்வாய்) இருளாலேயிறே நாம் பிழைத்தது! இனி இவ்விருளைச் சரணம்புகுமித்தனையிறே என்று பிள்ளையுறங்காவில்லிதாஸர் பணிப்பாராம்.

(6-4-8 நீணிலத்தோடு வான்வியப்ப)

213. (அப்பன்தன் மாயங்களே காணும் நெஞ்சுடையேன்) * முடியானேயிற் கரணங்களையுடைய ஆழ்வாராகையாலே நெஞ்சுதானே நினைக்கவும்வற்றாய்க் காணவும் வற்றாயிருக்கும் என்று பிள்ளான் பணிக்கும் என்றருளிச்செய்வர். அதவா, கட்கண் என்றும் உட்கண் என்றும் சொல்லுகிறபடியே நெஞ்சுதன்னையும் கண்ணாகச் சொல்லக்கடவதிறே, அதாகவுமாம்.

(6-4-9 கலிக்கவேழ்கடல்)

214. (வலக்கையித்யாதி) இவ்விடத்தை பட்டருளிச்செய்யாநிற்கச்செய்தே வன்துவரைப்பெருமாளிருந்தவர், மால்வண்ணனை மலக்கு நாவுடையேன் என்ன வமையாதோ? *வலக்கையாழியிடக்கைச்சங்க மிவையுடைய* என்கிறவிதுக்குத் தாத்பர்யமென்? என்ன; சோளேந்த்ரசிங்கனை யுளுக்காகப் பண்ணுகிறேன் என்கிறார்காண்! என்றருளிச்செய்தார்.

(6-4-10 மண்மிசைப்பெரும்பாரம்)

215. (விண்மிசைத்தனதாமமேபுக) ஒரு தீர்த்தத்தினன்று சாயிறுபாடு ஆண்டாளும் எம்பாரும் தங்களிலே சந்தித்து அஹங்கார மமகார தூஷிதராயிருப்பார் பத்துக்கோடி பேர் நடுவே அதிஸுகுமாரமான திருமேனியைக்கொண்டு பத்தராவெழுந்தருளி நிர்ப்பயமாகப் புக்கருளப்பெற்றபடி கண்டதே! என்று ஒருவரையொருவர் தெண்டனிட்டுத் தழுவிக்கொள்ளாநிற்கக் கண்டேன் என்றருளிச்செய்வர் ஜீயர்.

(6-5 துவளில் மாமணிமாடம் ப்ரவேசம்)

216. இத்திருவாய்மொழி ஆழ்வார் ப்ரக்ருதி சொல்லுகிறது என்று நம்முதலிகளெல்லாரும் போர விரும்பியிருப்பர்கள்.

— பாசுர வியாக்கியானம் —

217. (நின்று நின்று குமிறுமே) ராஜகோஷ்டியிலே 'உரும் இறும்' என்று ஒரு பொருள்சொல்ல, விக்ரமஸிங்கனென்பானொருவன் அன்னனல்ல; கன்றைக்கட்டிவைத்தால் மூலைக்கண்கடுத்துப் பசு அலமந்து படுமாபோலே என்னோடு ஸஹவாஸம் வாய் விடமாட்டாதே நோவுபடுகிற விவளுக்கு [illegible]

(6-5-5 குழையும்வாண்முகத்தேழையை)

218. (மழைபெய்தாலொக்கும் கண்ணநீரினொடு) ஆளவந்தார் மணக்கால்நம்பி பக்கலிலே எம்பெருமானைக் கேட்டவனந்தரம் உபாயம் இதுக்குமேலில்லை, இவ்விஷயத்தை இப்போதே ஸாக்ஷாத்கரிக்க விரகில்லையோ என்றாராம்.

(6-5-7 அன்னைமீர் அணிமாமயில்)

219. (இவள் வாயனகள் திருந்தவே) பட்டர் அழகிய மணவாளப் பெருமாள்! என்றால் திருநாமம் நிறம்பெறுமா போலேயும், சோமாசியாண்டான் எம்பெருமானார்! என்றால் திருநாமம் நிறம்பெறுமாபோலேயும், அனந்தாழ்வான் திருவேங்கடமுடையான்! என்றால் திருநாமம் நிறம்பெறுமாபோலேயும்.

(6-5-9 இரங்கி நாடோறும்)

220. (மரங்களுமிரங்கும் வகை) எம்பாரை மரங்களுமிரங்கக்கூடுமோ? என்று கேட்க, இது அருளிச்செய்த அன்று தொடங்கி எத்தனை ஸாவசுத்தியில்லாதார் வாயிலே புக்கதென்று தெரியாது; இங்ஙனே யிருக்கச்செய்தே யமநியமாதிக்ரமத்தாலே பதஞ்செய்யப்பார்த்தாலும் சுக்கான் பருக்கைபோலே நெகிழாதேயிருக்கிற நெஞ்சுகளும் இன்று அழுகிறபடிகண்டால் ஸமகாலத்தில் மரங்கள் இரங்கச்சொல்லவேணுமோ? என்றருளிச்செய்தார்.

(6-7 உண்ணுஞ்சோறு ப்ரவேசம்)

221. ஆளவந்தார் கோஷ்டியிலே *உண்ணுஞ்சோற் [illegible] * கள்வன் கொல்லிற் பிராட்டிக்கோ அஞ்சவேண்டுவது? என்றுகேட்க, இருவராய்ப்போனவர்களுக்கு வயிறெரியவேணுமோ? தனிவழியே போனவளுக்கன்றோ வயிறெரியவேண்டுவது—என்று இருந்த முதலிகள் சொல்ல; அங்ஙனன்று காணுங்கோள், இருவராய்ப்போனவர்களானகையாலே இருவர்க்கும் அஞ்சவேணும்; தனியேபோனவளுக்கொரு பயமுண்டோ என்றருளிச்செய்தார்.

— பாசுர வியாக்கியானம் —

222. (கண்கள்நீர்மல்கி) நஞ்சீயர், "பிள்ளை திருநறையூர் அரையரோடே மூன்று திருவாய்மொழிகேட்டேன், அதில் எனக்கொரு வார்த்தைகளும் போகாது; ஒரு திருவாய்மொழியை ப்ரஸ்தாவியா அவர் சிலவராய்க் கண்ணும் கண்ணநீருமாய் இருக்குமிருப்பை நினைத்திருப்பன்' என்று அருளிச்செய்வர்.

(ஸதா த்ரஷ்டவ்ய:) ஸதாதர்சனம் பண்ணுகைக்கு ஒரு தேசவிசேஷம் தேடிப்போக வேணுமோ? அனந்தாழ்வான் சோழகுலாந்தகனிலே க்ருஷிபண்ணியிருக்கிறானொரு ஸ்ரீவைஷ்ணவனைக்கண்டு உம்முடைய ஊர் ஏது? என்று கேட்க; அவர் திருக்கோளூர் என்ன, அங்கு நின்றும் போந்ததென்? என்ன, தேஹயாத்ரை நடவாமே போந்தேன் என்ன; அவ்வூரில் கழுதையை மேய்த்து ஜீவிக்கமாட்டிற்றிலையோ! நிலைநின்ற ஜீவனத்தை விட்டுப்போந்தாயாகாதே என்றானாம்.

(புகுமூர்) எம்பெருமானார் தெற்கே எழுந்தருளாநிற்க, எதிரே வருகிறாள் ஒரு பெண்பிள்ளையைக்கண்டு எங்கு நின்றும்? என்ன; திருக்கோளூரில் நின்றும் என்ன; அவ்வூரில் புக்க பெண்களும் போகக் கடவராயிருப்பர்களோ! என்றருளிச்செய்தார்.

(6-7-3 பூவை பைங்கிளிகள்)

223. (பூவைவீத்யாதி) *ஊரும் நாடுமுலகமும் தன்னைப்போல்* என்கிறபடியே இவைதாம் திருநாமத்தைச் சொல்லிற்றாகலாகாதோ என்று பெற்றி நம்பிள்ளையைக்கேட்க;

அதுக்கு வ்யபிசாரமுண்டு; பந்து ஆகாத என்கிறவிடத்தே தட்டுப்பிறக்கும் என்ன; அங்ஙனேயிறே யென்று இசைந்துபோனார்.

(6-7-5 மேவிணைந்துணைந்து)

224. (கண்டு) பின்னை திருநறையூரரையரும் பட்டருமாக உள்ளே ப்ரதக்ஷிணம் பண்ணுகிற்க, இட்ட அடி மாறியிடமாட்டாதே கண்களாலே பருகுவாரைப்போலே பார்த்து வாழ்ந்துகொண்டு போகிறபடியைப் பின்னே நின்று கண்டநுபவித்தேன் என்று நஞ்ஜீயர் அருளிச்செய்தார்.

ஆச்சானும் ஆண்டானுமாகக் கிழக்கே நடக்கிறபோது திருப்பேருக்குக் கிழக்கு போகவும் மாட்டாதே எறித்திருவடி தொழவும் மாட்டாதே திருப்பேர் நகரான் கோயிலைப் பார்த்துக்கொண்டு இருந்தார்களாம்.

225. (ஆவியுள்குளிர) இவ்விடத்தை பட்டர் அருளிச் செய்யாநிற்கச்செய்தே பேவெழ அருளிச்செய்தாராய், சிரமப்பிள்ளை யிருந்தவர், ஜீயா' எம்பார் அருளிச்செய்யும்போது ஆவியு (3) ள்குளிர என்று முகந்துகொண்டருளிச்செய்யும்படி கேட்டறிகையில்லையோ என்றருளிச்செய்தார்.

(6-7-9 கார்வயல் நெல்லணைகள்)

226. (நடந்தான்) ஒருநாள் நஞ்சீயர் ஜீயர் கோஷ்டியிலே வைத்துப்போரக் கொண்டாடியருளி, தன் சிஷ்யனைத்தான் கொண்டாடாநின்றான் என்னாதே கிடீகோள்; *கணபுரங்கைதொழும் பிள்ளையைப் பிள்ளை யென்றெண்ணப் பெறுவரே* என்று பண்டு சொன்னாரும் உண்டுகிடீகோள் என்றருளிச்செய்தார். அப்பணியாழ்வான் தன் சிஷ்யனைத்தான் தெண்டனிடாநிற்குமாய்; இதுவென்? என்றுகேட்க, அல்லாத வைஷ்ணவர்களை வ்ருத்தத்தாலே அறியவேணும்; இவர்கள் ஞானநிய வைஷ்ணவர்கள் என்று ஆதரிப்பன் என்றானாம்.

(6-8 பொன்னுலகுப்ரவேசம்)

227. செல்லவைத்தனளே என்றது செல்லுகையிலே யொருப்பட்டாளென்றதாய் முட்டப்போகாமல் கிடந்து ஐகாஸ்யம் பற்றாசாகத் தூதுவிடுகிறாள் என்று பட்டர். பல பாட்டுக்களிலும் "இதுவோதக்கவாறு" என்கையாலே, ஆந்ருசம்ஸ்யம் பற்றாசாகத் தூதுவிடுகிறாள் என்று பிள்ளான் பணிக்கும்படி.

"புஞ்ஜானா மாநுஷாந் போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ, ஸமா த்வாதச தத்ராஹம்" என்கிறபடியே பன்னிரண்டாண்டு தண்ணீர்த் துரும்பறக்கவந்து பிரிந்த பிராட்டியைப்போலே அங்கே நெடுங்காலம் அவனையநுபவித்துப்பிரிந்து தூதுவிடுகிறாள் என்று பிள்ளான். புறப்பட்டவள் முடியப்போகமாட்டாதே நடுவேபோன ஸ்தலத்திலே கிடந்து தூதுவிடுகிறாள் என்று பட்டரருளிச்செய்யும்படி.

— பாசுர வியாக்கியானம் —

228. [பொன்னுலகாளீரோ, புவனிமுழுதாளீரோ] அருளாளப்பெருமாளைப் பெருமாளுர் கோயிலே பின்னையுறங்காவில்லிதாஸரைக்கொண்டு ஆழ்வான்புக, ஆழ்வான் பண்ணின நெஞ்சாறல் ஆறுவது ஆளவந்தார் ஸ்ரீ பாதத்சேறப் போனாலிறே என்ற வார்த்தையை நினைப்பது. (அதாவது ஆழ்வான் பெருமாள் திருவடிகளிலே ஒரு வார்த்தை விண்ணப்பஞ் செய்தாராகில் அபிமதஸித்தியாம் என்கை) (ஆளீரோ) இவள்தான் உபய விபூதியும் கொடாநின்றாளாகில் அவன் வந்தால் தானும் அவனும் எங்கேயிருப்பது? என்ன, இக்குருவிகாட்டின விடத்தே என்று அனந்தாழ்வான் வார்த்தை. (நன்னலப்புள்ளினங்காள்) உங்கள் தாத்துக்கு அது ஓராறும் தாளிப்பூவுமிறே என்பராம் பிள்ளையமுதனார்.

பாண்டவர்களுக்குத்தூதுபோன க்ருஷ்ணனையும் ஆளவந்தார்க்குப் பச்சையிட்ட மணக்கால் நம்பியையும் போலே யிருந்தீயுங்கள்படி.

(6-8-2 மெய்யமர்வாணெடுங்கண்)

229. (மெய்யமர்காதல்) "தம்மைப்போலே பொய்யுமாய் நிலைநில்லாத காதலன்று எங்களது என்று சொல்லுங்கோள்" என்று பிள்ளான் பணிக்கும். அன்றிக்கே மெய்யமர் காதல்—ஆத்மாநுபந்தியான காதல்; மெய்யென்று ஆத்மாவாய், ஆத்மாவோடே பொருந்தின காதல் என்றுமாம்.

(6-8-3 ஓடிவந்தேன் குழல்மேல்)

230. (என்குழல்மேல்) பிராட்டியைக் கண்ட ஹர்ஷம் நடுவில் மதுவநமன்றுமில் ராஜபுத்ரர்கள் முதுகோடே போம் என்று பட்டருளிச் செய்வர்.

(6-8-6 என்பின்னுநூல்மார்வன்)

231. (கிம்புநர் மத்விதோ ஜநः) என்றவிடத்துக்குச் சொல்லுவதொரு வார்த்தையுண்டிறே; அருளாளப்பெருமாளெம்பெருமானாருடைய அந்திமதசையிலே திருவுள்ளத்திலோடுகிறதென்? என்ன, ஒரு பக்திபெருமாளுடைய திருவுள்ளத்தைப் புண்படுத்தினபடியென்! என்று கிடந்தேன் என்றார் என்று. இதுக்கு கருத்தாகப் பிள்ளையருளிச்செய்யும் வார்த்தை—நாம் பண்ணின ஸாநுதாபமாகையாலே பலத்தோடு அவ்யபிசாரியாகமாட்டாது; இனி சரண்யன் நீர்மையிலேற்றத்தாலே நமக்கு ஒரு குறையில்லையென்கிறது என்று.

(பெருமாளைப் புண்படுத்துகையாவது ஸ்ரீ விபீஷணாழ்வானை ஸங்க்ரஹ்ய ஸந்தாத்திலே கைக்கொள்ளாமல் வைத்தாம் என்று அல்பம் தாமஸம் பிறக்கையாலே கபோதத்தோபாதி நாம் ரக்ஷிக்கப்பெற்றிலோம் என்றிருக்கை)

(கன்மின்கலின்னமையான் நம்பியாவைத்த) கம்ஸுதலாம் ஸ்ரோஸ்தானங்களாக சிறியார் பெரியார் என்றுதிந்த்வயத்தை யப்யஸிப்பித்து வைக்குமாபோலே.

(6-8-8 பூசறவெய்தியின்னே)

232. (மறுகோக்கிலள்) தமிழர் வினைவெச்சமாய்க் கிடக்கிறது என்று சொல்லுவர்கள்; அதாவது (மறுகோக்கிலள்பேர்த்துமற்று என்று சொல்லுங்கோள்) என்று இத்தனையுமிட்டுச் சொல்லவேண்டுகை.

(6-8-10 வந்திருந்தும்முடைய)

233. (என்னை) இப்படி தர்க்கதையானுள் இவளென்று இவள்நிலைவர்ணயத்தைத் தம்முடம்பிலே காட்டவும் வற்றாகாதே இவை என்று ஜீயர் அருளிச்செய்வர்.

(6-9-3 ஞாலத்தூடேநடந்துநின்றும்)

234. (ஞாலத்தூடே நடந்தும்) வடதேசத்தினின்றும் போப்பாடவல்லாரிருப்பாரொருத்தர் பெருமாளைத் திருவடி தொழவேணும் என்றுவர, ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் ஒரு தீர்த்தத்தின்று திருமாலையைப் பாடசைத்து மொண்டாளையொரு பத்தகஜத்தைக் கைகடசப்படுத்துமாபோலே ஏத்தி வசமாக்கிக் கணிசங்கொண்டு, நாயன்தே! தேவரீர் திருவடிகளுக்குப்போர நல்லானொருவன் பாவைத் திருவடிதொழ விருத்தாமுண்டு வந்திருக்கிறது; இவனையழைத்துக்கொண்டு எம்பாவனை பண்ணியருளவேணும் என்ன; அவரைப்பெருமாள் அருளப்பாடிட்டு, திருப்புன்னைக்கீழினின்றும் அவர் நின்ற விடத்தேறத் திருக்கைத்தலத்தே எழுந்தருளி விண்ணப்பஞ்செய்வார்களை யருளப்பாடிட்டு, "வாரீகோள்! நாம் இவன் வந்ததூரத்துக்கெல்லாம் போருமோ செய்ததாம்" என்று திருவுள்ளமானார். அப்படியிறே நம்மிழவுகளும் திருவுள்ளத்தே பட்டு அவையெல்லாம் ஆறும்படி முகம் தந்தருளும்படியும்.

(6-9-9 ஆவி திகைக்க)

235. (துடக்தாமரைகட்கே) பிள்ளானுடைய அந்திம தசையிலே நஞ்சீயர் நோவறியப்புக்கிருக்க, "கூவிக்கொள்ளுங்காலம் இன்னங்குறுகாதோ" என்று பலகால் சொல்ல,

இத்தைக்கேட்டு ஜீயர் அழ; ஜீயரே! நீர்கிடந்தழுகிறதென்? அங்குப்போய்ப்பெறப் புகுகிற பேறு இதிலும் தண்ணிது என்று தோன்றியிருந்ததோ? என்று பணித்தான்.

(6-10-4 ஆவாவென்றுது அவதாரிகை)

236. நம்பிள்ளை ஜீயரை ஒருநாள் பஞ்சமோபாயமென்று கொண்டு ஒன்றுண்டு என்று சொல்லாநின்றார்கள்; நாட்டிலேயும் அங்ஙனே சிறப்பதொன்றுண்டோ? என்று கேட்டருள, நான் அறிகிறிலேன்; இனி சதுர்த்தோபாயந்தான் பகவானேயாயிருக்கப்போமோ? வ்யோமாதீதஞ்சொல்லுவாரைப்போலே அவனுக்கும் அவ்வருகே யொன்றுண்டு என்கையிறே; அதுநான் கேட்டறியேன் என்றருளிச்செய்தார். ஆனால் ஆவாவென்கிற பாட்டு அருளிச்செய்யும்போது எனக்குத் தனியே ஒரு ஸாதனங்கண்டு தரவேணுமென்கிறார் என்று அருளிச்செய்கையாயிருக்குமே என்ன; அதுவோ? அது உன் ப்ரதிபத்தியில் குற்றங்காண்; அதுக்கு இங்ஙனேகாண் பொருள்; நீயும் உளையாயிருக்க, நான் இங்ஙனே யிழப்பதேயென்கிறார்காண் என்று அருளிச்செய்தார்.

நஞ்சீயர் ஸ்ரீபாதத்திலே ஆச்ரயித்தானொருவன் எம்பெருமானே உபாயமாகில் ப்ரபத்திகொண்டு இங்குச்செய்கிறது ஒன்றுங் கண்டிலேன் என்ன; செவியைப்புதைத்து நாதமுனிகள் தொடங்கி இவ்வளவும்வர நம் ஆசார்யர்கள் பரமரஹஸ்யமாக உபதேசித்து ஓராண் வழியாய்க் கொண்டு போந்த இதின் சீர்மையறியாத உனக்கு மஹாபாபியேன்! இத்தை வெளியிடுவதே! என்று திருமுடியிலே அடித்துக்கொண்டு திருப்பவளிகையிலே புக்கருளினார்.

— பாசுரவியாக்கியானம் —

237. (ஆவாவென்றுது) நஞ்சியர் ஒருவனுக்குப் பரார்த்தம் அஸஹ்யமாயிருந்ததாகில் நமக்கு பகவத் ஸம்பந்தமுண்டு என்று அறுதியிடலாம்; அது ப்ராப்தம் என்று இருந்தானாகில் நமக்கு பகவத்ஸம்பந்தமில்லையென்று தனக்கேற கைவாங்கவமையும் என்றருளிச்செய்தார்.

(6-10-7 அடியேன்மேவி)

238. (திருவேங்கடத்தெம்பெருமானே) பட்டர் சிதயத்திலே அமுது செய்யப்பண்ணும்போது ஸ்தோத்ரத்தை விண்ணப்பஞ் செய்வது என்ன; என்னஸ்தோத்ரத்தை விண்ணப்பஞ்செய்வதென்ன; "அடியேன் மேவியமர்கின்றவமுதே" பச்சைமாமலைபோல்மேனி" என்கிறபாட்டுக்கள்போலே யிருக்குமவற்றை விண்ணப்பஞ்செய்வது என்றருளிச்செய்தார்.

(6-10-8 நோலாதாற்றேன்)

239. (நோலாது இத்யாதி) (ஸ ப்ரஹ்மா ஸ சிவஸ்ஸேந்த்ர:) இங்ஙனேயிருக்கச் செய்தேயும் அஹிர்புத்ந்யஸம்ஹிதையிலே இவர்களுடைய வாக்யங்களை ப்ரமாணமாகக் கொண்டு போராநின்றோமேயென்னில்; ஸத்த்வம் தலையெடுத்தபோது சொல்லுமவையெல்லாம் கொள்ளக்கடவோம்; இவைகைக்கொண்டோமென்று இவர்கள் தாங்கள் உத்தேச்யராகார்கள்; "காக்கைவாயிலுங் கட்டுரை கொள்வர்" எனறுண்டே என்று பட்டருளிச்செய்வர்.

(6-10-10 அகலகில்லேன்)

240. (உறைமார்பா) ஒருநாள்பட்டர் பிள்ளையழகியமணவாளரையர்க்கு த்வயமருளிச்செய்கைக்காக எல்லாரும் போங்கோள் என்ன; நஞ்சீயரும் எழுந்திருந்துபோய் நம்மையிராய் என்றருளிச் செய்திலர் என்று வெறுத்திருக்க, அப்போதே ஜீயர் எங்குற்றார்? என்று தேடியழைத்துக் கூடவைத்துக்கொண்டிருந்து த்வயத்தை அருளிச்செய்யாநிற்கச் செய்தே அப்போது அருளிச்செய்தவார்த்தை என்று ஜீயர் அருளிச்செய்வர். (மேலே ஈடு ஸேவிப்பது.)

— ஆறும்பத்து முற்றிற்று —

(7-1 உண்ணிலாவிய ப்ரவேசம்)

241. பிள்ளை திருநறையூரரையர், "இப்பாட்டுக்களில் பூர்வார்த்தமடைய புலியின் வாயிலேயகப்பட்ட ப்ரஜை தாய்முகத்திலே விழித்துக்கொண்டு புலியின் வாயிலே கிடந்து நோவுபடுமாபோலேயாயிருக்கிறது" என்று பணிப்பர்.

பாசுர வியாக்கியானம் —

242. (எண்ணிலாப்பெருமாயனே) "அஸ்மாந் மாயீ ஸ்ருஜதே விச்வமேதத்" என்றும் "மம மாயா துரத்யயா" என்றும் சொல்லுகிறபடியே எண்ணிறந்த செயல்களைச் செய்யவற்றாய் நீ வேண்டாதாரைச் சிறையிட்டு நலியக்கடவதான ப்ரக்ருதியைப் பரிகரமாகவுடையவனே! என்று பிள்ளான் பணிக்கும்படி.

(7-2 கங்குலும் பகலும் ப்ரவேசம்)

243. பட்டர் இத்திருவாய்மொழி அருளிச்செய்யும்போதெல்லாம் "ஆழ்வார்க்கு ஓடுகிறதையறியாதே இவருடைய வாய்க்ருத்யமின்றிக்கே யிருக்கிறோம் என்சொல்லுகிறோம்" என்று திருமுடியிலே கையை வைத்துக்கொண்டிருப்பர்.

.........ஆண்டான் ஒருநாள் ஆழ்வானுக்கு 'பிள்ளைகள் விவாஹப்ராப்தரானார்கள், இவ்விடையாட்டமொன்றும் ஆராய்கிறிலேன்' என்ன; 'பயமற்றுப் பத்துக்கு என்னை இன்று நேர்ந்து கரையச் சொல்லுகிறீரோ! நாமே நான் வாசித்துச் சமைத்துக்கொள்ள அங்கே வைக்காட்டு' என்ன, பட்டரையும் சீராமப்பிள்ளையையும் கொடுத்துப்போகவிட, வாசித்துச் சமைத்து பெருமாள் திருவடிகளிலே நிற்க, ஒன்று சொல்லுவாய் போலேயிருந்தாய்! என்று திருவுள்ளமாக, இவர்கள் விவாஹப்ராப்தரானார்களென்றுநின்றார்கள்' என்று விண்ணப்பஞ்செய்ய, எல்லாம் செய்கிறோம் என்று திருவுள்ளமானார்; பிற்றைநாளே மன்னியைக் கொண்டுவந்து கொடுத்தார்கள். .... ... ...

அகளங்கப்ரம்மராயர் அடையவளைந்தான் செய்யாநிற்கச் செய்தே மதிள்போக்குகைக்காக இளையாழ்வானகத்தை வாங்கப்புக, பட்டர் அத்தைக்கேட்டருளி 'வாரீர் பிள்ளாய்! நீர் செய்கிற மதிள் பெருமாளுக்கு ரக்ஷகமென்றிராதே கொள்ளீர்; இங்கு இருக்கிற காறும் குடியுங்காணும் பெருமாளுக்கு ரக்ஷை; ஆனபின்பு நீர்செய்கிறவையெல்லாம் அழகிது; இவையெல்லாம் நாம் செய்கிறோமென்றிராதே பெருமாள் செய்விக்கிறாரென்றிரீர், உமக்கு நல்வழிபோக வடவாங்காணும் என்றருளிச்செய்தார்.

(7-2-3 வட்கிலளிறையும்)

244. (வட்கிலள் இறையும்) இதுக்கு ஜீயர் அருளிச்செய்வது—இவள் முடிந்தாள் என்று. (வட்கென்று லஜ்ஜை) லஜ்ஜையிறே ஸ்த்ரீத்வத்தை அறிவது; ஸ்வரூபத்தைப் பற்றி வரும் குணம்போனால் ஸ்வரூபமும் போயிற்றாமத்தனையிறே. நிரூபகத்தையொழிய நிரூப்யஸித்தியில்லையே.

(7-2-5 சிந்திக்கும் திசைக்கும்)

245. (தேறும்) உய்ந்தபிள்ளை பாடும்போது, கெட்டேன்! இவள் 'தேறும்' என்பதே! என்று ஜீயருளிச்செய்வராம். (திருவரங்கத்துள்ளாயென்னும்) பெருமாளே யென்னும் என்று ஜீயர்.

(7-2-7 பாலதுன்பங்கள் அவதாரிகை)

246. "ஆச்ரிதரை வாழ்விக்கையும் அநாச்ரிதரை நலிகையுமன்றிக்கே இப்போது விபரீதமாயிற்றோ உம்முடையபடி என்கிறாள்' என்று பிள்ளான்.

(7-2-7 பாலதுன்பங்கள்)

247. (என்னுடைக்கோமளக் கொழுந்தே) தசைசமுறுகினால் வைத்யர் கண்முகம் பாராதாப்போலே மகளவஸ்தையைக்கண்டு தளர்ந்து பெரியபெருமாள் முகம்பாராதே வார்த்தை சொல்லுகிறாள் என்றருளிச்செய்வர்.

(கொழுந்து) இப்பாட்டிலொருதலைக்கட்டின்றிக்கே யிருக்குமிதுக்குக் கருத்து—பரிஹரிக்குமெல்லைகழிந்தாள்; நாம் இவர்க்குச்சொல்லுவதென்? என்று தன்னிலே நோவுபடுகிறாள் என்று வங்கிப்புரத்து நம்பி பணிக்கும்.

(7-2-9 என்திருமகள்சேர்)

248. (என்திருமகள்சேர்மார்பனே யென்னும்) அனந்தாழ்வான் தன் பெண்பிள்ளையை என்திருமகள் என்று திருநாமஞ் சாத்தினான். பட்டர் பெருமாளுக்கு அடியேனை ஸ்த்ரீதனமாகப்பிராட்டிக்கு வந்தவன் என்று திருவுள்ளம்பற்றவர், நாளும் இவர் எங்கள் நாய்ச்சியார்க்கு நல்லர் என்று அவ்வழியே அழகியமணவாளப்பெருமாள் என்று நினைத்திருக்கவுமாகவேணும் என்று வேண்டிக்கொண்டார்.

(சேர்மார்பனே) பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்யுமவை கேட்கைக்காக நஞ்சீயரையழைத்தருளித் தாம் அமுதுசெய்யாநிற்கச்செய்தே இத்திருவாய்மொழி இயலைக்கேட்டருளாநிற்க, இப்பாட்டளவிலே வந்தவாறே 'என்திருமகள் சேர்மார்பனேயென்னுமென்னுடையாவியே யென்னும்' என்று இயலைச்சேர்த்தருளிச்செய்ய, அத்தைக்கேட்டு கையையுதறி ஸ்ரீரங்கநாதா! என்று அணையிலே சாய்ந்தருளினார் பட்டர்—என்று அருளிச்செய்வர். அப்போது திருமேனியிலே பிறந்த விக்ருதியைக்கண்டு இவர்க்கு பகவத்ப்ராப்தி அணித்தாகிறதோ என்று அஞ்சியிருந்தேன் என்று ஜீயர் அருளிச்செய்வர்.

(7-2-10 முடிவிவள்தனக்கு)

249. (மூவுலகு இத்யாதி) மூவுலகாளியே! கடிகமழ்கொன்றைச் சடையனே! நான்முகக்கடவுளே! என்னும் வடிவுடைவானோர்க்குத் தலைவனே என்னும்—என்று திருமாலையாண்டான் வையதிகரண்யமாக்கி நிர்வஹிக்கும்; என்னும் என்னும் என்னுமவையும் எம்பெருமானார் கேட்டருளி ஸாமாநாதிகரண்யத்தாலே அருளிச்செய்தருளினார். தரை லோகத்துக்கும் கடவனான இந்த்ரனுக்கு அந்தர்யாமியாய் நின்று அவனுடைய அதிகாரத்தை நிர்வஹிக்கிறவனே! என்றும், பரிமளத்தையுடைய கொன்றையை ஜடையிலேயுடைய ருத்ரனுக்கு அந்தர்யாமியாய் நின்று அவனுடைய பதத்தை நிர்வஹிக்கிறவனே என்றும் அவர்களோடு இவ்வருகுள்ளாரோடு வாசியற எல்லார்க்கும் நிர்வாஹகனாயிருக்கிற சதுர்முகனாகிறதேவதைக்கு அந்தர்யாமியானவனே! என்றும்.

(அடியடையாதாளித்யாதி) ஜீவிப்பாரைப்போலேயிருந்து கடுகமுடிந்து கொடுநின்றாள் என்று நிர்வஹிப்பாருமுண்டு; அப்போது மேல்ப்ரபந்தம் நடவாதாகையாலே, திருவடிகளைக் கிட்டாதாரைப்போலேயிருந்து க்ரமத்திலே கிட்டிக்கொடு நின்றாள் என்று அருளிச்செய்யும்படி.

(7-2-11 முகில்வண்ணனடியை)

250. (முகில் இத்யாதி) பெரியபெருமாள் திருவடிகளிலே திருவாய்மொழியாயிர முஞ் சொல்லிற்று; *திருமோகூர்க்கீத்தபத்து *திருவேங்கடத்துக்கிவைபத்து* என்று பிரித்துக்கொடுத்த வித்தனை; பெருமாள் திருப்பணைகையில் அமுதுபடியிலே மற்றைத் திருப்பதிகள் நாயன்மார்க்கும் அளந்துகொடுக்குமாபோலே என்று பிள்ளையருளிச்செய்வர்.

(7-3 வெள்ளைச்சுரிசங்கு ப்ரவேசம்)

251. அங்ஙனன்றிக்கே பின்னான் பணிக்குப்படி (முகில்வண்ணனடியை-இவ னணுகியடைந்தனள் என்றதாகையாலே) *ஸமா த்வாதச தத்ர ஹம்* என்கிறபடியே பெரிய பெருமாளோடே சிரகாலம் உக்மன்தகுஸமான ஸம்ச்லேஷம் ப்ரவ்ருத்தமாய் பிரிந்து கூட விடில் இரண்டு தலைக்கும் அழிவுவருமளவாச்சுதாய் இனியெல்லாவளவிலும் ஒரு நீரகக் கலக்கிறது தர்மியிரண்டும் கூடியிறே; ஆகையாலே பிரியாவிடில் தர்மிலோபபர்யந்தமாகப் புக இவ்வளவில் நாயகனான இவன் இரண்டு தலையும் ஜீவிக்கப்பார்ப்பானொருவனாகையாலே பிரிவை ப்ரஸங்கிக்க; இவளும் விச்லேஷத்தில் வாஸனையில்லாதாளொருத்தியாகையாலே இதுதானும் கலவியிலே பொருவகையோ என்று கொண்டு அநுமதிபண்ண; அவனும் அவ் வேட்டைநிமித்தமாகப் புறப்பட இவளும் திருவனுக்கன் திருவாசலளவும் ஒருப்படுத்தி னள்; எல்லா வளவிலும் பிரிவு தன்காரியம் செய்தன்றி நில்லாதிறே அநந்தரம் இவள் நோவுபட இத்தைக்கண்ட தோழிமாரும் தாய்மாரும் உனக்கோடுகிறதென்? என்றுகேட்க; ஸ்ரீ ஜநக ராஜன் திருமகள் காட்டிலே கூடப்போய் அவரிருந்தவிடம் நின்றவிடம் உலாவினவிடந் தோறும் கூடவிருந்து அநுபவித்தாப்போலே நானும் அவனிருந்தவிடத்தேபோய்ப் புக்கல்லது நில்லேன் என்ன; உனக்கு இது தலைமைக்குப் போராது; நீ சொல்லுகிறவை வார்த்தை யன்று என்ன; அவர்களை நீங்கள் நிரோதிக்கிறதால் பெற்றதென்? நான் போகை தவிரேன் நீங்களே என்னைக் கொடுபோய் விடுங்கோள் என்ன; அவர்கள் அதுக்கு நாங்கள் வழிப் படோம் என்ன; ஆகில் நானேயாகிலும் போகை தவிரேனென்கிறாள் என்று.

(7-3-1 வெள்ளைச்சுரிசங்கு)

252. (தாமரைக்கண்ணன்) கண்களோடே திவ்யாயுதங்களைக் கூட்டுகிறது அழ குக்கு. இவ்விடத்தே நிலாத்துக்குறிப்பவர் வார்த்தையை யருளிச்செய்வர் ஜீயர்.

(நெஞ்சினூடே) நஞ்சீயர் கோயிலுக்கெழுந்தருளாநிற்க வழியிலே பிள்ளானைக்கண்டு ஈச்வரனுக்கு ஸ்வரூப வ்யாப்தியேயோ? விக்ரஹ வ்யாப்தியும் உண்டோ? என்று கேட்க; பாஷ்யகாரர் தோற்றவருளிச்செய்து கொண்டுபோந்தது ஸ்வரூப வ்யாப்தியாயிருக்கும்; ஆகிலும் எம்பார் ஒருநாள் உபாஸநாநுக்ரஹார்த்தமாக ஆச்ரிதருடைய நெஞ்சிலே விக்ரஹத் தோடே வ்யாபித்திருக்குமென்று அருளிச்செய்யக்கேட்டேன் என்று பணித்தான்.

(7-3-2 கானக்கருங்குழல்)

253. (கானக்கருங்குழல்) ஒரு தமிழன் கானமென்று குழலுக்கு விசேஷணமாகை யாலே காவிபோன்ற குழல் என்றான்.

(7-3-7 பேரெயில் சூழ்கடல்)

254. (வந்து வீற்றிருந்த) *நீயோ கேத்ராதுர்ஸ்யேவ ப்ரதிகூலாஸி மே த்ருடம்* இதுக்கு ஆளவந்தாரருளிச்செய்யும்படி; க்ஷேத்ரதோஷத்தால் வந்ததுபோக்கி நீயதோஷத்தால் வந்ததன்று என்று.

(7-4 ஆழியெழ ப்ரவேசம்)

255. (தேவகுமாரூபம்) இவரையே நீதான் காட்டேறப்போக என்கிறது? "இவர்க்கு மல்லரேயோ?" என்று சிறியாத்தான் கேட்க; கண்ணைச்சிவாம் என்று தாம்போராதாரை ஒப்பாகச்சொல்லி ருசி கரிக்கிறான் என்றார்.

(7-4-1 ஆழியெழ)

256. (ஆழியெழ) பிள்ளையுறங்காவில்லிதாஸர் மஹாமதி: என்னது "மதிகேடரென்றிறபடியோ? என்றார்; பின்னை தாம் பெருமாளெழுந்தருளும்போது எங்கேனுமொரு சலனம் பிறக்கில் நம் ப்ராணனை விடுமத்தனை என்று சொட்டையை யுருவிப் பிடித்துக்கொண்டு ஸேவிப்பராம்; நம்முதலிகள் அத்தைக்கண்டு இவரை மஹாமதிகள் என்றழைப்பர்கள்; அறிவுண்டாகையாவது பகவத் விஷயத்திலே மதிகெடுகையிறே.

(7-4-4 நாளுமெழ)

257. (அப்பனூழியெழு) ஸ்ரீரோஷாபங்களுண்டானால் நம்முடைய அடையவளைந் தானுக்கு உள்ளே புகும்போது திருவாசலில் பிறக்கும் ஆரவாரம்போலே திருவயிற்றிற் புகுகிறபோது ப்ராணிகளுக்கு உண்டான ஸம்ப்ரமத்வநிகள் இவை. அன்றியே இவற்றை யுமிழ்கிற போதைத்வநிகாண் என்று அம்மாள் பணிக்கும்படி என்றருளிச்செய்வர்.

(7-5-3 கேட்பார்கள்

258. (தன்மைபறவாரையறிந்துப்) ஆளவந்தார் ஸ்வபாவம் பெற்றிலனாகாம் என்று அருளிச்செய்வர்; அதுவென் என்னில், இதுக்கு அடியாகச் சொல்லலாவதொரு ஸாதநம் இவன் கையிலில்லாமையாலே. காட்டை கவியாமைக்குக் கொற்றவன் வாசலுக்குள்ளே சுழற்றியெறிந்தானத்தனைகாண் என்று அருளிச்செய்வர்.

(7-5 11. தெளிவுற்று வீவின்றி)

259. (தெளிவுற்றித்யாதி) அர்ஜுனன் தான் எம்பெருமானைப் பெற்றனனே இல்லையோ என்று நம்பிள்ளை ஜீயரைக் கேட்க; உமக்கு அதுகொண்டு கார்யமென்; இது சொன்னவன் ஸர்வஸாதாரணனாகில் பகவத்பக்தியென்னுமிடம் நிச்சிதமாகில் தந்தாமுடைய கார்யாநுகூலமாகவும் ருச்யநுகூலமாகவும் பெறுகிறார்கள்; பெற்றவர்களை ஆராய்ந்துபார்த்து அத்தாலேயன்றே நாம் பற்றப் பார்க்கிறது என்று அருளிச்செய்தார்.

(7-6 பாமருமூவுலகம் ப்ரவேசம்)

260. அம்மங்கியம்மாள் இத்திருவாய்மொழி பாடக்கேட்டு அநுபவித்துப் போருமிதுக்குமேற்பட இதிலோடுகிற ஆர்த்திக்கு நம்மால் பாசுரமிட்டுச் சொல்லப்போகாது என்று பணிக்கும் என்றருளிச்செய்வர்.

(7-6-10 ஏற்றரும் வைகுந்தத்தை)

261. (கூற்றியல்கஞ்சனைக்கொன்று) *விகளத் கிரீட மவநீதலே பாதயாமாஸ* ராஜத்ரோஹிகளைக் கொல்லும்போது ராஜசிஹ்நங்களை வாங்கிக் கொல்லுவாரைப்போலே காண் என்று அம்மாள்.

(7-7-2 ஆட்டியும் தூற்றியும்)

262. (வல்வினைக்கின் சுடராய்) எற்றிய பெருவினைக்கு என்று ஒருதமிழன் இட்டு வைத்தான் என்று அருளிச்செய்வர்.

(7-7-6 உய்விடமேழையர்க்கும்)

263. (உய்விடமித்யாதி) அபலைகளை கலியுமாபோலே அஸுரராக்ஷஸர்களுக்கும் ஸ்நேஹத்தை விளைத்து வாஸகமாகாநின்றது என்று ஒரு தமிழன் இட்டுவைத்தான் என்றத்தை ஜீயர்கேட்டருளி இப்பொருள் அழகிது ஆனாலும் அபஸூதர்மம்; அஸுரராக்ஷஸர்களுக்கும் வாஸகமாகாநின்றதென்று இப்போது இது சொல்லுகை தேட்டமன்றிறே; ஆனபின்பு அதுவேண்டா என்று அருளிச்செய்தாராம்.

(7-8-2 அங்கண்மலர்)

264. (அங்கண்மலரித்யாதி) கீழ்த்திருவாய்மொழியிலே *விள்கின்றபூந்தண்டுழாய் விரைநாறுவந்து* என்று சொன்னதை ஸ்மரிக்கிறார் என்று பிள்ளான் பணிக்கும்.

(7-8-4 கள்ளவிழ்தாமரைக்கண்)

265. (கள்ளவிழித்யாதி) கீழ்த்திருவாய்மொழியிலே *சூழவுந்தாமரை நாண்மலர் போல்வந்துதோன்றும் என்றத்தை ஸ்மரிக்கிறார் என்று பிள்ளான்பணிக்கும்; அத்தை ஜீயர் கேட்டருளி கீழ்ப்போருகிற ரீதியின்படியே இதுவாகப் பெற்றதாகில் அழகிது; அங்ஙனன்றிக்கே இது ஸாக்ஷாத்காரமாய் அறிவுண்டானபின்பு பாவனைத்தோடு பொருந்தமாட்டாது என்று அருளிச்செய்தாராம்.

(7-8-7 துயரங்கள் செய்யும்)

266. (சுடர்நீண்முடியாய்) *முற்றவிம்மூவுலகும் விரிகின்ற சுடர்முடிக்கே யொற்றுமைக்கொண்டது* என்றது பின்னாட்டுகிறது என்று பிள்ளான்.

(7-9-1 என்றைக்குமென்னை)

267. (என்சொல்லி நிற்பனோ) க்ருஷ்ணத்வைபாயநம் வ்யாஸம் வித்தி நாராயணம் ப்ரபும் । கோஹ்யந்ய: புண்டரீகாக்ஷாத் மஹாபாரதக்ருத் பவேத் ॥ என்னுமாற்போலேயிருக்கிறதாயிற்று. இதுக்கு ஆளவந்தாரருளிச்செய்யும்படி; ஸர்வேச்வரன் செய்யப்புக்கால் அரியதும் ஒன்றுண்டோ என்றார். அங்ஙனன்றிக்கே எம்பெருமானார்; இவர்தாம் சொன்னாராகிலும் ஒருபடியாகச் சொல்லித் தலைக்கட்டுவர்; அவனுடைய தானே சொன்னானாகில் நிரவத்யமாகத் தலைக்கட்டும்; இது ப்ராஜ்ஞ யெழுத்திடப் புக்கால்தானே ப்ரதேசம் ஒருபடியிட்டுத் தலைக்கட்டும்; பிதாவாதல் உபாத்யாயனாதல் இடப்புக்கால் தானே எழுத்தாயிருக்கும்; அங்ஙனன்றிக்கே இவன் கையைப்பிடித்து இடுவிக்கப்புக்கவாறே இவன் தன்னிடத்தேயிழுக்க அவன் தன்னிடத்தேயிழுக்கத் துவளிக்கொட்டியாய் ரூபமழிந்து சிதறிப்போம்; அப்படியே என்னை உபகரணமாகக்கொண்டு கவிபாடாநிற்கச் செய்தேயும் என்னால் வரும் தோஷம் தன்பக்கல் ஸ்பர்சியாதபடி பாடுவித்தான் என்கிறார் என்று.

(7-9-2 என்சொல்லிநிற்பன்)

268. (என்முன் சொல்லும்) நம்பி திருவழுதிநாடுதாஸர் ஸ்ரீ வைஷ்ணவனாவானொருவன் ஸந்த்யாவந்தனத்திலே வந்து கண்டால் பின்னையிவனுக்கு உழக்கரிசியைக் கொடுப்பித்துவிடுமித்தனைபோக்கி அங்கு அவர்கள் உள்ளிடங் கொடார்கள்; திருவாய்மொழியப்யஸித்தான் ஒரு விண்ணப்பஞ் செய்வான் சென்றால் ஸர்வேச்வரனும் க்ராமத்திலுள்ளாரும் புறப்பட்டு எதிர்கொண்டு தங்களிருப்பிடத்தை யொழித்து அவனுக்குக் கொடுத்து ஆதரியாநிற்பார்கள் என்று ப்ரஸாதிப்பர்.

(7-9-3 ஆமுதல்வனிவனென்று)

269. (ஆமுதல்வனிவனென்று தன்தேற்றி) இங்கே அருளிச்செய்யும் வார்த்தை; திருப்புற்றுக்குக்கிழக்கே கரியமாணிக்காழ்வார் திருமுன்பின் ஸோபாநத்திலே ஆளவந்தார் எழுந்தருளியிருக்க உடையவர் திருப்புற்றுக்குக்கிழக்காக எழுந்தருளிநிற்கிறவரைக்கண்டு ஆமுதல்வனிவன் என்று அருளிச்செய்தாராம் என்று.

(7-9-4 அப்பனை என்றுமறப்பன்)

270. (என்னாகியே) இவ்விடத்துக்கு எம்பாரருளிச்செய்யும்படி—தான் பாடினானாகில் கிரவத்யமாய்த் தலைக்கட்டும்; நான் பாடினேனாகிலும் வருத்தியொருபடி தலைக்கட்டும்; என்னையுபகரணமாகக் கொண்டு கவிபாடாநிற்கச்செய்தேயும் என்னோட்டை ஸ்பர்சத்தால் வந்ததோஷம் தட்டாதபடி கவிபாடித் தலைக்கட்டினான் என்று.

(7-9-9 திறத்துக்கேதுப்புரவாம்)

271. (தன்னை நறப்பல இன்கவிசொன்ன) என்றதுக்கு ஜீயருளிச்செய்யும்படி (யதோ வாசோ நிவர்த்தந்தே) என்று வேதங்கள் மீண்ட விஷயத்தை மறுபாடுருவச்சொன்ன என்று. அன்றிக்கே பிள்ளான் பணிக்கும்படி “ஸர்வேச்வரனுக்குச் சாலவுற்றதென்கிறார்” என்று.

(7-10-4 வாய்க்குங்கோல் நிச்சலும்)

272. (பலநாளும் [illegible] நினைக்கப்பெற) முற்காலத்திலே இடையாற்றுக்குடிநம்பி யென்பாரொருவருண்டு; அவர் திருநாட்கள் தோறும் பெருமானை வந்து ஸேவித்துப் போனால் மறித்துத் திருநாள் வருந்தனையும் இதுதன்னையே போதுபோக்காக ஸ்மரித்துக் கொண்டிருப்பாராயிற்று; ஒருநாள் ஒரு திருநாளில் வ்ருத்தாந்தம் அநுஸந்தியாநிற்கச்செய்தே அமுதுசெய்கைக்குப் போதுவைகிற்று என்றார்களாய், ஆகில் வருகிற திருநாள் அணித் தாகிறது என்றாராம். அவர் நூறு வயஸ்ஸாம் புகுகையாலே வலஹாநிபிறந்து திருமுனைத் திருநாளில் பெருமாள் புறப்பட்டருளுகைக்கு உதவவந்து புகுரப்பெற்றிலர்; பெருமாளும் தேடியருளிக்காணாமை ‘நம் இடையாற்றுக்குடியான்’ வந்திலன், நங்கண்ணனையல்லவோ? என்று திருவுள்ளமானாராம். அவர்தாம் ஆறுந்திருநாளிலே ஸேவிதநிற்கச்செய்தே நாம் உனக்குச் செய்யவேண்டுவதென்? என்று கேட்டருள, தேவரீர் தந்தருளின சரீரத்தைக் கொண்டு போக்காரியங்கொண்டேன்; இனிப் போக்குவரத்துக்கு யோக்யமாகாதபடி போருஜீர்த்தது என்ன; வாராய்! மெய்யே இளைத்தாயாகில் இங்ஙனேயிரு—என்றருளிச் செய்தார். பெருமான் ஈவிற்ற்றிருவாசலுக்கு அவ்வருகே யெழுந்தருளுங்காட்டில் திருநாட் டுக்கெழுந்தருளினார்.

(7-10-5. மலரடிப்போதுகள்)

273. (மலரடியார்முன்பருளிய) கிழக்குத்தை ராஜாக்கள் பொல்லாங்காலே இங்கே கலிவு பிறக்குமளவிற் செய்வதென்? என்று எம்பெருமானார் அத்தை அநுஸந்தித் தருளி, இத்தேசத்தை விடாதே நோக்கிக்கொண்டு கிடக்கோம்; இவ்விடத்துக்கும் அழிவு வரும்படி ஆசாரவர்க்கம் மேலிடாநின்றது; மேல்செய்யவடுப்பதென்? என்று பெரியநம்பிக்கு அறிவிக்க, நான் பெருமாளுடைய திருவெல்லையிலே ஒரு ப்ரதக்ஷிணம் வரும்படியாக உம் சிஷ்யர்களிலே ஒருவரைப் போகவிடுவது என்ன; அதுக்காவாரார்? என்ன; என்பின்னே போராநின்றால் ஒருவன் பின்னே போகா நின்றேன் என்று தன்னெஞ்சிற்படாதே சாயைப் போலே என்னைப் பின்செல்வானொருவனாகவேணும் என்ன; அதுக்காவார்? ஆழ்வான் [illegible] ஆழ்வானைப்போகவிடலாகாதோ என்றாராம்.

(8-5-2. காணவாராயென்றென்று)

281. (கன்றுடு) பிள்ளான் எம்பெருமானைப்பெற்று அநுபவிக்கும் நாடுகாண் என்னுமாம்; இல்லையாகில் கூப்பிடார்களோ என்று.

(8-5-5. சொல்லமாட்டேனடியேன்)

282. (அல்லல் இத்யாதி) உன்னைக்காட்டாதே அருமைப்படுத்தப்பார்த்தாயாகில் நாட்டார் தண்ணிது என்கிற அஜ்ஞாநம் வருவதோருபாயம் ஏதோ! என்றருளிச்செய்வர் பட்டர்; இப்போது மறந்து பிழைக்கலாமென்னுமத்தாலே. திருவடிகள் என் ஹ்ருதயத்திலே ப்ரகாசியாநிற்க துக்காத்மகமாம் அஜ்ஞாநம் வருகைக்கு உபாயமுண்டோ என்னும் அம்மாள்; உண்டாகில் உண்டுடுத்துத்திரியலாமே நாட்டாரோபாதி.

(8-6-11. சோலைத்திருக்கடித்தானம்)

283. (சடகோபன்சொல்) பாலென்கிறது சோலைத்திருக்கடித்தானத்துறை திருமாலை; அமுதென்கிறது சடகோபன் சொல்லென்கிற வாசகத்தை. இது ஆளவந்தார் நிர்வாஹம்.

(8-7-1. இருத்தும்வியந்து)

284. (அழைத்தேற்கு) இவன் ப்ரலாபிக்கிறதைப் பரியாதே தாழ்த்தாளுகையும் [illegible] அஸஹிஷ்ணுடராகவும் விலைத்துக்கூப்பிட்டு [illegible] னும் பிள்ளான்.

(8-7-3. அருள்தானினி)

285. (இதுவல்லால் இத்யாதி) இதுக்குத்திருமாலையாண்டான் பணிக்கும்படி = நாட்டார் ஐச்வர்யத்தில் தலையாகச்சொல்லுவது த்ரைலோக்யைச்வர்யத்தையிறே; அதுவும் எனக்கு ஒரு சாக்கல்லவென்கிறார் என்று. எம்பெருமானார் அருளிச்செய்யும்படி = என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்து எழுந்தருளியிருக்கிற இருப்பொழிய வீற்றிருந்தேழுலகும் தனிக்கோல் செல்ல இருக்குமிருப்பையும் தனக்கு ஐச்வர்யமாக நினைத்திருக்குமோவென்று பார்த்தால் அதுவும் ஒரு சாக்காக நினைத்திருக்கிறிலன் என்று இதுவே ப்ரகரணத்துக்குச் சேருவது.

(8-7-9 வயிற்றிற் கொண்டு)

286. (மதியாலே) "இவன்படியை அறிந்துகொண்டேனென்கிறார்" என்னும் அம்மாள். 'அன்றிக்கே, மதி: அநுமதி:' என்றுக்கி அநுமதிமாத்ரத்தாலே என்பர் பட்டர். அதாவது அவன் புகுருகிறவிடத்தில் விலக்கிற்றிலேனென்கை.

(8-8-2. அடியேனுள்ளான்)

287. (அடியேனுள்ளான்) திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீபாதத்திலே ஆறுமாஸம் ஆழ்வான் ஸேவித்து நின்று போரப்புக்கவாறே, "ஆழ்வான்! ஆழ்வார் 'அடியேனுள்ளான்' என்றபடி கண்டாயே" என்ன, க்ருதார்த்தனானேன் என்று போந்தாராம்.

(8-8-5. நின்றவொன்றை அவதாரிகை)

288. 'எம்பெம்மானொடு' என்கிற பாட்டளவும் கேவல ஆத்மஸ்வரூபத்தைச் சொல்லுகிறது. என்று எம்பார் அருளிச்செய்யும்படி; ஆண்டான் ப்ரகாரமான வேஷத்திலே சொல்லுகிறது என்னும்.

(8-8-8. எய்த்தாரெய்த்தார்)

289. (கல்லுறைப்பு) ஆண்டான் பணிக்கும்படி—நின்றவொன்றை யுணர்த்தேனுக்கு என்னும் பாட்டுத்தொடங்கி நிஷ்க்ருஷ்டாத்மாநுஸந்தானமாத்ரமேயன்றிக்கே பகவச்சே

ஷத்வபர்யந்தமாக அநுஸந்திக்கிறது; இப்பாட்டில் *எம்பெம்மானோடொத்தே சென்றங்குள்ளக்கூடக்கூடிற்றாகில் என்கிற அந்திமஸம்ருதியும் எம்பெருமான் தனக்கு சேஷமாக இவ்வாத்மவஸ்துவை நினைத்திருக்குமாபோலே இவனும் அவனோடொத்து அவன் நினைவோடொத்து அத்தசையிலே சேஷத்வாநுஸந்தானம் கூடுமாகில் நல்ல வாய்ப்பு என்று.

(8-9. கருமாணிக்கமலைப்ரவேசம்.)

290. "ப்ரீதியில் அந்யாபதேசமுள்ளது இத்திருவாய்மொழியொன்றுமே" என்று ஆழ்வான் நிர்வஹிக்கும்படி.

(8-9-3 புகழுமிவள்)

291. (புகழும் பொருபடையான செழுங்கதிராழிமுதல் என்று) "சத்ரோ: ப்ரக்யாத வீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:" என்கிறபடியே 'கையும் ஆயுதமுமாய்ப்பொருத்தமிருந்தபடியென்!' என்று சத்ருக்கள் புகழும்படியைச் சொல்லுகிறது" என்று எம்பெருமானார் அருளிச்செய்யும்படி.

(8-9-9. பரவாளிவள்)

292. (பரவாள் கழுனிகள்சூழ்) பட்டர் "அவ்வூரில் ப்ராம்மணர் இறத்துமாய்கிறார்கள், இவளினைருக்குச் சிறப்புச்சொல்லிப்போருகிறீரே" என்றருளிச் செய்வர்.

(8-10. நெடுமாற்கடிமைப்ரவேசம்)

293. அப்முணியாழ்வான் போசுல, ராஜ்யத்தினின்றும் வந்தகாளிலே பட்டர் கண்டருளி நீ ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் போர அடிமைசெய்து போந்தாய் என்று கேட்டோம்; உன் ப்ரக்ருதிக்குச் சேர நெடுமாற்கடிமையைக்கேள் என்று அருளிச் செய்தாராம்.

(8-10-3. உறுமோபாவியேனுக்கு)

294. (சிறுமாமனிசராய்) சிறுமை பெருமையாகிற விருத்த தர்மத்வயத்துக்கு ஏக தர்மியில் ஸமாவேசம் கூடினபடி எங்ஙனே, என்று பட்டர் பால்யத்திலே ஆழ்வானைக்கேட்க நம்மோடொக்க அந்பாநாதிகள் தாரகம் என்னலாய் பகவத்விஷயத்திலவகாஹம் பார்த்தால் நித்யஸூரிகளோடொப்பர்கள் என்னலாயிருக்கிற ஆண்டான் அருளாளப்பெருமாள் ஸ்ரீகோவிந்தப்பெருமாள் இவர்கள்காண் சிறுமாமனிசராகிறார்கள் என்று பணித்தான்.

(8-10-11. நல்லகோட்பாடு)

295. (கொண்ட இத்யாதி) திருவனந்தபுரத்துக்குச் சாத்தாகப் போகாநிற்கச் செய்தே திருக்கோட்டியூரிலே செல்வநம்பி திருமாளிகையிலே போய்ப்புக்கார்களாய் நம்பி தாம் அங்கிறந்தாராயிருக்க நங்கையார் ஆதரித்துக் கோட்டடைகிடக்க அவற்றைக்குத்தி ஸ்ரீவைஷ்ணவர்களை அமுதுசெய்யப்பண்ணிவிட பிற்றைநாள் நம்பிவந்து அவை செய்ததென் என்ன பரமபதத்திலே விளைவதாக வித்தினேன் என்றுளராம்.

எட்டாம்பத்து முற்றிற்று.

---

## திருவாய்மொழி ஒன்பதாம்பத்து

(9-1. கொண்டபெண்டிர் ப்ரவேசம்)

296. ஆப்பான் திருவழுந்தூரரையர் ஆச்ரயித்ததும் திருவாய்மொழி கேட்டதும் ஆழ்வானோடேயிறே. *சயமே அடிமை தலைநின்றார் என்றது ஸ்ரீபாதாழ்வான் போல்வாரை;

*நீக்கமில்லாவடியார் என்றது இளையபெருமாள்போல்வாரை; *கோதிலடியார் என்றது ஸ்ரீ சத்ருக்நாழ்வான் போல்வாரைக்காணும் என்று ஆழ்வான் பணித்தானாகப்பணிப்பர்.

(**9-1-3.** பொருள்கையுண்டாய்)

297. (என்னே யென்பாருமில்லை) பிள்ளைதிருநறையூரரையர் ஒருவனுக்கிட்டொருவன் வெறுவியனாவது; அவனாலே ஸம்ருத்தனானவன் இவனை என் என்னுதல் இவன் க்ருஹத்திலே வந்தொருநாள் கால்கழுவிப்போதல் செய்ய அவ்வளவாலே இன்னான் இன்னானுக்கு பந்துவாகாதே என்று இவ்வளவுகொண்டு ஜீவிக்கலாயிருந்தால் அவ்வளவுஞ் செய்வாரில்லையென்று பணிப்பர்.

(**9-1-8.** வாழ்தல்கண்டீர்)

298. (மாயவனித்யாதி) இந்த மாயவனடியாராகை சூது சதுரங்கத்தோபாதி காலக்ஷேபமாக்குகிற புன்மையில்லாதவர்கள் என்று பட்டர்.

(**9-2-1.** பண்டைநாளாலே)

299. (நின்கோயில்சீய்த்து) திருக்கண்ணமங்கையாண்டான் அங்கே ஒரு திருமகிழ்மடியிலேயிருந்து சருகைத் திருவலகிடாநிற்க கூடவாசித்து நாஸ்திகனாயிருப்பானொருவன் பகவான் உபாயம் நாம் அநந்யப்ரயோஜநர் இப்போது இந்த க்லேசத்துக்குப் பலமென்னை; திருவலகிட்ட இடத்தையும் இடாத இடத்தையும் காட்டி இவ்விடமும் அவ்விடமுமிருந்தபடி கண்டாய்க்கு ஒரு பலமில்லையன்று தோற்றியிருந்ததோ என்றான்.

300. (உன் தாமரைக்கண்களால் நோக்காய்) பிள்ளை தேவப்பெருமாளரையர் உன் தாமரைக்கண்களால் நோக்காய் நோக்காய் என்று பலகாலுஞ் சொல்ல ஆழ்வாரெழுந்திருந்து, பிள்ளாய்! நீ இங்ஙனே திருவுள்ளம் புண்படும்படி பலகாலும் நிர்ப்பந்திக்கிறதென்; அழகிய மிடற்றைத் தந்தாராகில் நல்லபாட்டைத் தந்தாராகில் பிள்ளைகளையும் ஐச்வர்யத்தையும் தந்தாராகில் என்செய்யாதாராக நீர் இங்ஙனே கிடந்து படுகிறது என்றருளிச் செய்தாராம்.

(**9-2-4.** புளிங்குடிக்கிடந்து)

301. (புளிங்குடி இத்யாதி) பட்டர் திருநாராயணபுரத்தில் வெறுப்பிலே தேவர் ஸ்வாதந்த்ர்ய மெல்லாங்காட்டினாலும் பின்னையும் பண்ணின விச்வாஸத்தில் குலைதலின்றிக்கே யிருக்கும்படி எனப்பு உரமுடைய எம்பெருமானார் போல்வார் பக்கல் செய்யுமத்தை எளியேனாப்பனை அடியேன் பக்கலிலும் செய்வதோ? பரம விச்வாஸபூர்வகம் என்கிறபடியே ஏதேனும் ஒன்று வந்தாலும் இக்குத்தைக்கு ஒன்று வருவதாய் வந்ததன்று, இக்குடி நம்முடைய பாபம் என்று பண்ணின விச்வாஸம் குலையாதார் விஷயத்திலே செய்யுமத்தை இதுதானே ஹேதுவாக நெஞ்சு நெகிழும்படி இளநெஞ்சர் பக்கலிலும் அத்தைச் செய்யக்கடவதோ என்றாராம்.

(நீ காணவாராயே) பிள்ளை அழகியமணவாளவரையரைப் பெருமாள் ஒருநாள் அருளப்பாடிட்டு நாம் இங்ஙனே நடக்கிறோம், நீ அதுக்கீடாக ஆடிக்காண் என்ன தம்பிரானே என்னால் அந்த நடைக்கீடாக ஆடப்போமோ! [கானகம்படியுலாவியுலாவி இத்யாதி;] தேவருடைய குழலோசையைக் கேட்டவாறே பாடல் தவிர்ந்தார்கள், தேவருடைய ஸ்வாபாவிகமான நடைக்குத் தங்களுடைய சிக்ஷாபலத்தாலுண்டான ஆடல் தவிர்ந்தார்கள்; குரக்குக்கைகொடு கூழ்தழாவி அடியேன் தேவர் திருமுன்னே ஆடவல்லேனோ என்றாராம்.

(9-4-3. அழைக்கின்றவடிநாயேன்)

309. (பிழைக்கின்றதருளென்றுபேதுறவனே) வரையாதே ரக்ஷித்த மஹாகுணம் எனக்கு உதவாமையாலே இழக்கப்புகாநின்றாய் என்று பேகணியாநின்றேன் என்று ஆளவந்தார் அருளிச்செய்யும்படி. அத்தை எம்பெருமானார் கேட்டருளி இதுபொருளழகிது; ஆனால் இப்போது இவர்க்கு ஓடுகிற தசைக்குச் சேராது ஆனபின்பு பசுக்களும் இடையரும் வர்ஷத்திலே நோவுபடாதபடி மலையையெடுத்து மறித்த இம்மஹாகுணத்துக்கு நான் புறம்பாகிறேனோ என்று பேதுறுகின்றேன் என்று.

(9-4-6. கருத்தேயுன்னை)

310. (தேவர்கட்கெல்லாம் விருத்தா) தலைமகனையும் தலைமகளையும் கிழவனும் கிழத்தியும் என்று தமிழர் சொல்லக்கடவர்களிறே.

(9-4-10. அடியானிவனென்று)

311. (எனக்காரருள்செய்யும் நெடியானே) பிள்ளையகளங்கப்ரம்மராயர் பட்டரை ஸமாதானம் பண்ணவேணும் என்று இருகைமதவாரணம் என்கிறவனை வக்காட்டினராய் அவனைத் திருவுள்ளத்திலே விஷயீகரித்திருப்பர் என்னுமத்தைப்பற்ற அவனும்வந்து சில வார்த்தைகளை விண்ணப்பஞ்செய்து திருவுள்ளமும் ப்ரஸந்நமாயிருக்கிறவளவிலே இவனுடைய வைஷ்ணவத்வமிருக்கும்படி திருவுள்ளம்பற்றியிருக்கையன்றே என்றார்களாய் சொல்லவேணுமோ? கர்ப்பதாஸர்களன்றோ என்றது தொடக்கமாக இப்பாட்டையருளிச்செய்தார்.

(9-5-3. அவன்கையதே)

312. (தவஞ்செய்திலா) அவனைப்போலே பிரிவுக்குச் சிலையாதபடி பாக்யத்தைப் பண்ணப்பெற்றிலேன் என்று பிள்ளான் பணிக்கும்.

(9-5-10. எழநண்ணிநாமும்)

313. (தழைகல்லவித்யாதி) தாந்தாம் முடியநினைப்பார் காடுவாழ்வ என்பாரைப் போலே சொல்லுகிறாள் என்று ஆளவந்தார் நிர்வாஹம். நான் பட்டபாடு நாடுபடாதொழியவேணும் என்று எம்பெருமானார். நான்முடிய என்னார்த்திகண்டு நோவுபடாதே லோகமடங்கப்பிழைக்குமாகாதே என்று பட்டர்.

(9-6-1. உருகுமால் ப்ரவேசம்)

314. கடலைத் தரைகாண்பாரைப்போலே * இருந்தும் வியந்தில் அவயவத்தை இதிலே கொண்டுவந்து சேர்ப்பதே நம்முதலிகள் என்று சித்தாயருளிச்செய்வர். அடரப் பியுங்கிடக்கச்செய்தே சிலகுணாநுஸந்தானத்தாலே சிதிலராகிறாராய்த்து. அப்ரீதி கர்ப்ப குணாநுஸந்தாநம் என்று ஆளவந்தார் அருளிச்செய்யுஞ் சந்தை இதுக்கு.

(9-6-2. நினைதோறும்)

315. (உனக்கு) நானுனக்காட்செய்யும் சீர்மை என்பானென்? நீயெனக்காட்செய்யும் சீர்மை என்னுமல் என்ன இச்சொலலையுமிழப்பதோ பாவியார் என்று எம்பார்.

(9-6-6. என்கண்ணன்கள்வம்)

316. (எங்கண்ணன் கள்வமெனக்குச்செம்மாய்நிற்கும்) எனக்குச் செம்மாய் நிற்கும் என்றத்தை எனக்குச் சேமமாய் நிற்கும் என்று ஒரு தமிழன் நிர்வஹித்தான்.

ரும் செயப் புத்திருக்கச் செய்தே இவர்களான வாசியிருந்தபடியென்! என்றிருந்தேன் என்றருளிச்செய்வர்.

(சேர்செருந்தி) பிள்ளைஜகந்நாதப்ரஹ்மராயர் திருமுடிக்குறையிலே பூவெட்டுவியா நிற்க எம்பார் அருளிச்செய்த வார்த்தையை நினைப்பது.

ஆச்சான் திருவாலிநாடு தாவர் நல்லன சிலசுரவன் பாக்குகளை பட்டருக்குக் கொடுவந்து கொடுத்தாராய் அவற்றைக்கண்டு இவை இருந்தபடியென்! திருவருள் கமுகின்றும் வந்தவையோ என்றருளிச்செய்தாராம்.

(10-2-5. புண்ணியஞ்செய்து)

328. (எந்தை நாமம்) ஜீயர் பட்டரை திருநாமம் சொல்லும்போது ப்ரயதனாய்க் கொண்டு சொல்லவேணுமோ என்று கேட்க; கங்கையிலே முழுகப்போமவனுக்கு வேறொரு உவர்க்குழியிலே முழுகிப்போகவேணுமோ; மேலுண்டான நன்மையைத் தருகிற இது அதிகார ஸம்பத்தியையும் தாமாட்டாதோ என்றருளிச்செய்தாராம்.

(இப்பிறப்பறுக்கும்) ஒரு செட்டியை இவன் தமிழுக்குத் தேசிகனாயிருக்கும் என்று பட்டருக்குக் காட்டினார்களாய் உனக்கு ஏதேனும் அபேக்ஷையுண்டாகில் கேட்கலாகாதோ என்ன; சிலர் காண்கிற தேஹத்துக்கு அவ்வருகு ஆத்மாவுமில்லை தர்மாதர்மங்களுமில்லை ஈச்வரனுமில்லை என்கிறார்கள்; சிலர் இத்தேஹந்தான் அநித்யம் என்று இதின் தோஷத்தை தர்சித்து அவ்வருகே ஸ்திரமாயிருப்பதொன்றைப் பற்றவேணும் என்கிறார்கள்; விஷயமொன்றாயிருக்க இவ்விரண்டு பரிமாற்றமும் நடக்கிறபடியெங்ஙனே என்ன; *மமமாயா துரத்யயா* என்றும் *மாயாமேதாம் தரந்திதே* என்றும் சொல்லுகிறபடியே பாக்யவான்களுக்கு இதினுடைய தோஷதர்சநத்தைப்பண்ணிக் கழித்துக்கொள்ளுகைக்கும் பாக்யஹீனர்க்கு இதிலேபோக்யதாபுத்தி பண்ணி அனர்த்தப்படுகைக்கும் உடலாம்படி கர்மாநுகுணமாக இத்தை இடையெடுத்துக்காணும் ஈச்வரன் பண்ணிற்று என்றருளிச்செய்தார்.

(10-2-8. கடுவினைகளையலாகும்)

329. (பாசம் இத்யாதி) திருவத்யயனம் நடவாநிற்க இத்தைக்கேட்டருளி ஆளவந்தார் நமக்கு ஆழ்வாரோடே ஒரு ஸம்பந்தமுண்டாகவேணும் என்று அப்போதே ஸ்ரீ பாதத்தையுடையாரைக் கூட்டிக்கொண்டெழுந்தருளினர்.

(10-2-9. நாமுமக்கறியச்சொன்ன)

330 (நாம் உமக்கு இத்யாதி) (ஜ்ஞாநாக்யப்லீபவிஷ்யந்தி) அவன்போனால் பின்னைக் கொள்வாரும் கொடுப்பாருமின்றிக்கே பரிமாற்றமறும். இதுக்கு பட்டர் அருளிச்செய்ததாக பரிஜையப்பர்—ஒரு மதிப்பன் தலையில் கிடவாதவன்று கொள்வார் கொடுப்பாரின்றியே எளிவிளையவாய்ப்போம்.

(10-3-4. தொழுத்தையோம்தனிமையும்)

331. (துணைபிரிந்தார் துயரமும்) துணையென்றால் த்விஷ்டமாயன்றோகாணிநப்பது என்னுமாச்சான்.

(விரும்பி) பிள்ளையமுதனார் ஒரு பசுவின் காலிலே முள்பாய்ந்தால் இடையன் தலைகாணிக்கொள்ளுவன் என்பராம்.

10-4-1. சார்வே தவநெறி ப்ரவேசம்)

332. (ஆளவந்தார் அருளிச்செய்ததாகத்திருமாலையாண்டான் பணிப்பது—ப்ரபத்தி விஷயமாக வாய்த்த விடுமின்முற்றம்; உடையவரும் அப்படியே ப்ரபத்திவிஷயமாக அருளிச்செய்து கொடுபோந்து பாஷ்யம் அருளிச்செய்தபின்பு ரஹஸ்யோபாயத்தை வெளியிடவொண்ணாது என்று விடுமின்முற்றத்தையும் பக்திவிஷயமாக்கி அருளிச்செய்தார். ஆக முதல்திருவாய்மொழியில் சொன்ன ப்ராப்யஸ்வரூபத்தையும் ப்ராப்திபலமான கைங்கர்யத்தையும் கெடுமிடரிலே படமுடையரவில்பள்ளிபயின்றவன் என்றும் கடைத்தலைசீயக்கப்பெற்றால் என்றும் அருளிச்செய்து அக்கைங்கர்யத்தில் களைபறித்து "உன்தன் திருவுள்ளமிடர் கெடுந்தோறும் நாங்கள் வியக்க இன்புறுதும்" என்று உத்தரகண்டத்தில் சமச்சப்தார்த்தத்தை அருளிச்செய்து கெடுமிடராலும் வேய்மருதோளிணையாலும் முதல் திருவாய்மொழியை நிகமித்து; சார்வேதவநெறியாலும் கண்ணன் கழலிணையாலும் விடுமின்முற்றத்திலும் பத்துடையடியவரிலும் சொன்ன பக்திப்ரபத்திகள் ஸ்வார்த்தபத்தோடே பொருத்தினபடியை அருளிச்செய்தார் என்று ஆளவந்தார் அருளிச்செய்ததாகத் திருமாலையாண்டான் பணிப்பது.

(10-6-1. அருள்பெறுவாரடியார்)

333. (அது நமது விதிவகையே) அது நம்முடைய பாக்யாநுகுணமாகவிறே என்று இருக்கும்பூர்வர்கள் நிர்வஹிக்கும்படி. இத்தை எம்பெருமானார் கேட்டருளி இத்திருவாய்மொழியில் மேலோடுகிற ரஸத்தோடு சேராது; நாம் விதித்தபடியே செய்வானாயிருந்தானென்கிறார் என்றருளிச்செய்வர்.

334. (நமது விதிவகையே) (ததாநுஜாநந்த முதாரவீக்ஷணை:) இது பட்டர்தாமே அருளிச்செய்ய நான்கேட்டேனென்றருளிச்செய்தார்;—சேனைமுதலியார் சட்டையும் மயிர்க்கட்டும் கையும் பிரம்புமாய்வந்து புகுரப்புக்கவாறே நாய்ச்சிமாரும் தானுமாய் ஸ்வைரமாக இருக்கிறவது தவிர்ந்து நாய்ச்சிமாரும் ஸிம்ஹாஸநத்தில் ஒரு மூலைகளிலே யொதுங்க, தானும் வினயமாக இருக்குமாய்த்து வ்ருத்த ஸாமந்தரைக் கண்ட ராஜாக்களைப்போலே, இவர்தாமும் இவ்விருப்புக்குத் தண்ணீர்த்துரும்பாகவொண்ணாதென்று ஜகந்நிர்வாஹத்துக்கு வேண்டுமவற்றைப் பாசுரப் பரப்பற விண்ணப்பஞ் செய்வாராய்த்து. பிராட்டிமாரோடிருக்குமதிலும் இனிதாயிருக்குமிறே அவனுக்கு இவர்தம்மைக்காண; * ஆயேனவிறே.

இன்னானை ப்ரஹ்மாவாக்கவேணும், இன்னானை மாற்றவேணும் என்று வேண்டுமவற்றைச் சுருக்க விண்ணப்பஞ்செய்வர்; ஐயர் யாதொன்று சொல்லிற்று அவையெல்லாமப்படியே என்று கண்களாலே மேலெழுத்திட்டுக்கொண்டிருக்கும். இவ்வார்த்தையருளிச்செய்தபோது கிடாம்பியாச்சானோடு அல்லாதாரோடு வாசியறக் குமிழ்நீருண்டது. ஆச்சான் தான்பட்டர்க்கு ஸ்நேஹித்திருக்கும்போர; இளையாழ்வான் ஆச்சானை பட்டர்தம்மையாச்ரயித்தவர்களிற் காட்டிலும் நீர் தாழ அநுவர்த்திப்பானென் என்று கேட்க; நீ அன்றுகண்டிலைகாண்; எம்பெருமானார் பட்டர் கையிலே புஸ்தகத்தைக் கொடுத்துத் திருமுன்பே ஒரு ச்லோகத்தை விண்ணப்பம் செய்வித்துத் திருப்பிரப்புக்குப் புறப்பாகக்கொண்டு புறப்பட்டுச் சுற்றும் பார்த்தருளி நம்முடையாரடங்கலும் நம்மை நினைத்திருக்குமாபோலே இவனை நினைத்திருங்கோள் என்றருளிச்செய்தார்.

(10-6-5. வானேறவழிதந்த)

335. (நாகத்தை நகுநெஞ்சே) பிள்ளையழகியமணவாளப் பெருமாளரையர் க்ரந்தியைப்பார்த்துச் சிரித்துச்சொன்னவார்த்தையை நினைப்பது.

